இரண்டாவது

# திருமந்திர மாநாட்டு மலர்



ஜய—தை

1955

# பத்தாம் திருமுறை

## திருமந்திரம்



# சிவயோகப்பகுதி முதலியன

### உரைவிளக்கம்

*திருச்சிற்றம்பலம்.*

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு நீடூழி
தழைக மாதோ"

*திருச்சிற்றம்பலம்.*

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

வெளியீட்டு எண்—90

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமந்திரம்

## சிவயோகப்பகுதி முதலியன

***பழையவுரை விளக்கம்***

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறைஆதீனத்து

இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகசுவாமிகள்**

கட்டளையிட்டருளியபடி

திருவாவடுதுறை ஆதீனவித்துவான்

**த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளையால்**

*பரிசோதித்து நூதனமாகத் தொகுத்தெழுதிய*

*முகவுரையுடன் பதிப்பிக்கப்பெற்றது*

இரண்டாவது திருமந்திரமாநாடு

**1955**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## மெய்கண்டதேவநாயனார் துதி

பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
　　பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்
　　கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவும்
　　மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
　　பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்

— சிவஞானசித்தியார்.

# உள்ளுறை




| | | |
|---|---|---|
| முகவுரை | ... | i–xxxv |
| ஆறந்தம் | ... | 1 |
| ஞானத்தில்சரியை | ... | 5 |
| ஞானத்தில் கிரியை | ... | 6 |
| ஞானபூசை | ... | 8 |
| ஞானத்தில் யோகம் | ... | 9 |
| ஞானத்தில்ஞானம் | ... | 14 |
| பரைதரிசனம் | ... | 21 |
| பூரணஞானோதயம் | ... | 23 |
| சிவத்தியானம் | ... | 27 |
| திருவருளைத் தரிசிக்கும் முறை | ... | 32 |
| ஞானதீட்சை | ... | 34 |
| பிரம சொரூபப் பிரிவு | ... | 47 |
| செகசிவபரம் | ... | 48 |
| வேதாந்தசார அநுபூதித்திரட்டு | ... | 70–73 |

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 10 | பிரிகினற் | பிரிகின்ற |
| — | 13 | நாதந்த | நாதாந்த |
| 13 | 21 | ஞானசாரியர் | ஞானசாரியர் |
| 14 | 19 | என்பன் | என்பர் |
| 18 | 25 | இதமுமாய் | அதீதமுமாய் |
| 19 | 4 | சிஞ்சிக்ஞை | கிஞ்சிக்ஞை |
| 22 | 12 | ஆனந்ததீதம் | ஆனந்தாதீதம் |
| 23 | 21 | சதாக்கியம் | சாதாக்கியம் |
| 24 | 2 | ,, | ,, |
| 25 | 9 | அதீவிரதா | அதிதீவிரதா |
| 33 | 4 | சதுப்புயமும் | சதுர்ப்புயமும் |
| 37 | 25 | எனவும் | எனவும் வருவது கண்டு கொள்க |
| 59 | 3 | பூசந்தம் | பூசாந்தம் |
| 69 | 18 | ஹம்ஸஸேஹம் | ஹம்ஸஸோஹம் |

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முகவுரை

"சிவனொடொக் கும்தெய்வம் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை
புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரை யானே."
—திருமூலதேவர்.

தமிழ் மக்களுக்கு ஓர் வைப்பு நிதியாகத் தெய்வச் செந்தண்டமிழ் மொழியிலே அமைந்து விளங்குவன தோத்திர நூல்களும் சாத்திர நூல்களும் ஆம். கருவி நூல்களாகிய இலக்கண இலக்கிய நூல்கள் தமிழ் மொழியிற் சிறந்து காணப்படினும் அவை மக்கள் அறிவு வளர்ச்சிக்கே உறுதுணையாவன அன்றி, உயிர்க்கு உறுதிபயப்பனவாகிய செந்நெறியில் மக்கள் செல்வதற்குப் பெருந் துணையாவன அல்ல. தோத்திர நூல்கள் தேவார திருவாசகம் முதலிய திருமுறைகள். சாத்திரங்களாவன மெய்கண்ட சாத்திரம் முதலியன.

தேவாரம், திருவாசகம், திருக்கோவை, திரு
விசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், திருமுகப்
பாசுரம் முதல் நாற்பது பிரபந்தங்கள் ஆகிய இவற்றை
நம்பியாண்டார் நம்பிகள் பதினொரு திருமுறைகளாக
வகுத்தருளினர். மந்திரங்கள் பதினொன்றாதல்பற்றிப்
பதினொரு திருமுறைகளாக அமைந்தன என்பர் பெரி
யோர். அநபாய சோழர் காலத்திலே திருத்தொண்
டர் புராணம் பன்னிரண்டாம் திருமுறையாக வகுத்
தருளப்பட்டது.

சிவபெருமானுக்கு மந்திரம் தூல சரீரமும்,
ஆன்மா சூக்கும சரீரமும், சத்தி அதிசூக்கும சரீரமும்
ஆம் எனச் சிவாகமங்கள் கூறுகின்றன. மந்திர வடிவ
மாகிய வேதங்களிலும், அவற்றின் வேறாகாத திரு
முறைகளிலும் சிவபெருமான் விசேட சாந்நித்தியமுற்
றிருப்பர் என்க.

பதியினது விளக்கம் அறிவு ஒரு சிறிதும் இல்
லாத சடப்பொருளாகிய கல், வெள்ளி, செம்புகளில்
மந்திர நியாசத்துக்குப் பின்னன்றி முன்னில்லை. அப்
பதியினது இலக்கணத்தையும், பிறவற்றையும் உண்மை
யாகவே அறிவிக்கும் பேரறிவே வடிவாகிய திருமுறை
களில், அத்திருமுறைகள் தோன்றிய காலந்தொட்டு
என்றென்றும் அளவில்லாத சாந்நித்தியம் பெற்று
விளங்குவன. பஞ்சாட்சர மந்திரத்தையும், அப்

பஞ்சாட்சரம் முதலிய சகல மந்திரப் பொருள்களையும் உண்டாக்கி நின்று சித்தி முத்திகளைப் பயப்பிக்கும் மகா மந்திர வடிவமே திருமுறைகள் ஆதலின், அவைகளிலே பதியினது விளக்கம் நித்தியம் என்பது சத்தியமேயாம்.

வடமொழி வேதத்தில் பதி பசு பாசங்களின் இலக்கணங்கள் கூறப்பட்டிருத்தல் போலவே திரு முறைகளிலும் பதி பசு பாச உண்மைகளும் இலக் கணங்களும் கூறப்பட்டுள. ஆகலின், அவைகளும் 'முப்பொருளையும் உணர்தற்குக் கருவியாயுள்ளன' என் னும் பொருளைத்தரும் 'வேதம்' என்னும் பதத்தானே விவகரிக்கப்படும். இதனாலன்றோ,

**"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
**மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை**
**திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவா சகம்என் றுணர்"**

என ஔவையார் அருளிச்செய்தனர். "தமிழ் வேதம் பாடினார் தாளம்பெற்றார்" எனவும், "மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார்" எனவும், "விருப்புடன் பாடல் இசைத்தார் வேதம்தமிழால் விரித்தார்" என வும் அருண்மொழித் தேவர் கூறியருளினதூஉம் இக் கருத்தே பற்றியதென்க.

திருமுறைகளெல்லாம் ஆளுடைய பிள்ளையார் முதல் அருண்மொழித் தேவர் இறுதியாக உள்ள

நாயன்மாரகளால் கூறப்பட்டன; எனினும், சதாசிவ மூர்த்திபாலிருந்து இருக்கு முதலிய வேதங்கள் நான் கையும் காமிகம் முதலிய இருபத்தெட்டு ஆகமங்களை யும் சிவபிரான் தோற்றுவித்தாற்போல, ஆளுடைய பிள்ளையார் முதலியோரையும் அதிட்டித்து நின்று அத் திருமுறைகளைத் தோற்றுவித்தருளினர் என்க. அல்லதூஉம், பேயினால் பிடிக்கப்பட்டான் வாய்ச் சொற்கள் எல்லாம் பேயின் சொற்களே ஆம் அன்றி அவன் சொற்கள் ஆகாதவாறு போல, சிவபிரானால் அதிட்டிக்கப்பட்ட நாயன்மார் வாய்ச் சொற்களாகிய திருமுறைகள் எல்லாம் அச்சிவபிரான் வாய்ச்சொற் களே ஆம் அன்றி அவர் சொற்கள் ஆகாமை நன்கு தெளியப்படும்.

திருச்சிற்றம்பலக் கோவையார் உண்மையிலே,— "அத்திருவாக்கைப் பதிவாக்கியமென்றே கொள்வ தல்லது பசு வாக்கியம் என்று நினைத்தாலும் சனன மரணத்துக்கே வித்தாம். இவ்வுலகத்திலே பதிவாக் கியம் எது? என்னில், அநாதிமல முத்தராயுள்ள சதா சிவ மூர்த்தியுடைய திருவாக்காகிய ஆகம வேதங்கள் அன்றி, முன் பரிபாக சின்னம் விளங்கும்படி போதிக் கின்ற ஞான குருமூர்த்தங்களாய் உள்ள சந்தானு சாரியர், சமயாசாரியர்களுடைய திருவாக்குகளுமாம் என்க" எனக் கூறுமாற்றான் அவை சிவவாக்கேயாம் எனத்தெளிக.

*அசபா மந்திரம் என்பது ஓரெழுத்து ஒருமொழி. அது சகல மந்திரங்கட்கும் ஆதாரமாய் முதல்வனைக் குறித்து நிற்பது. அது வரிவடிவில் காட்டத்தக்கது அன்று. உபதேசக்கிரமத்தால் அறியவேண்டுவது. சித்தாந்த சைவ சன்மார்க்கரை அடுத்தறிக.*

**போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தை
ஏற்றுகின் றேன்எம்பி ரான்ஓர் எழுத்தே.**

—884

*இங்கே 'ஓரெழுத்து' என்றது அசபா மந்திரம். அது சிவபீஜம் என்பர்.*

**பொன்னான மந்திரம் புகலவும் ஒண்ணாது
பொன்னான மந்திரம் பொறிகிஞ் சுகத்தாகும்
பொன்னான மந்திரம் புகையுண்டு பூரிக்கில்
பொன்னாகும் வல்லார்க் குடம்புபொற் பாதமே.**

—906

*இங்கே 'பொன்னான மந்திரம்' என்றது அசபா மந்திரத்தை. பொன்னைப் போற்றிப் பாதுகாப்பது போலப் பெரிதும் போற்றத்தக்கது இது. 'புகையுண்டு பூரிக்கில்' என்பது அசபாமந்திரத்தை உபதேசக்கிரமமாகப் பெற்று மூலாதாரத்தினின்று சுழுமுனைவழியே செலுத்திப் பிரமரந்திரத்திலும் அதற்குமேலுமுள்ள 12 கலை*

16 கலை மாத்திரம் செலுத்தவல்லார்க்கு உடம்பு உள்ளும் புறம்பும் ஒளிவிட்டு விளங்கும். அருமை நோக்கி வல்லார் என்றது காண்க. பொன்போன்ற அருமையான திருவடி சித்திக்கும் என்றபடி. இதனை, "குண்டலியதனிற் கூடிய அசபை, விண்டெழு மந்திரம்" என விநாயகரகவல் கூறும்.

இனி, ஓர் எழுத்து என்பது பிரணவம் என்பர். அதை ஓம் ஓரெழுத்தே என ஒருவர் பிரித்து அறை- பறையடித்துத் தெரிவித்தல்; ஓ-பிரணவம்; ஓரெழுத்து அஜபா மந்திரம் எனக்குறித்துள்ளார். ஏகாக்ஷரமாகிய ஓம் என்னும் மந்திரத்தில் சர்வவியாபகராகிய சிவபிரான் உளர். "ஓமித் யேகாக்ஷரே மந்த்ரேஸ்தித: ஸர்வகத: ஸிவ:" எனச் சிவதருமோத்தரத்தும், "அகாரம் ப்ரமாணம் நாபௌ உகாரம் விஷ்ணும் ஹ்ருதயே மகாரம் ருத்ரம் ப்ரூமத்யே ஓங்காரம் ஸர்வேஸ்வரம் த்வாதசாந்தே" என நிருசிம்மதாபினியிலும், "ஸிவோத்வைத ஏவ மோங்கார:" எனவும் வருவனவற்றால் காண்க.

## பிராஸாத மந்திரம்

ப்ரா – சிவஞானம், ஸா – கதி, த – கொடுப்பது: சிவஞானகதியாகிய முத்தியைக் கொடுப்பதால் பிராஸாதம் எனப் பெயர் வந்தது. சுத்தாக்யை என்னும் நூலில் இவ்வாறு பொருள் கூறப்பட்டுளது.

சிவஞானத்துக்கு ஈடும் எடுப்பும் இல்லாதது போல இந்தப் பிராஸாதமும் மந்திரம் எல்லாவற்றிற்கும் மேலானது. இப்பிராஸாத மந்திரம் 20, 16, 12, 10, 9, 8, 6, 5—கலைகளையுடையதாய் எட்டுவிதமாய் இருக்கும். அவற்றுள், 20, 16, 12 கலைகளையுடைய மூன்றுவிதப் பிராஸாதங்களே முக்கியமானவை என்பர்.

பன்னிரண்டு கலைகளையுடைய பிராஸாதத்தில் முதல் ஹகாரம்; அதன்மேல் அகாரம்—1, உகாரம்—2, மகாரம்—3, விந்து—4, அர்த்தசந்திரன்—5, நிரோதினி—6, நாதம்—7, நாதாந்தம்—8, இடப்புறத்தில் விந்துவோடு கூடிய கலப்பை வடிவான சத்தி—9, அப்பால் வியாபினி —10, அப்பால் சமனை—11, கடையில் உன்மனை—12 இந்தமுறையே பன்னிரண்டு கலைகளாம்.

பதினாறு கலைகளையுடைய பிராஸாதத்தில் முன் கூறப்பட்ட அகாரம் முதல் வியாபினி வரையில் உள்ள கலைகள்—10. வியாபினிக்கு அப்பால் — வியோமரூபை —1, அநந்தை—2, அநாதை—3, அநாசிருதை—4 இந்த நான்கும் நடுவில் உள்ளன. அப்பால் முன்போலவே கடையில் சமனை—1, அப்பால் உன்மனை—2 இப்படிப் பதினாறு கலைகளும் காண்க.

மந்திர சம்பிரதாயத்தால் அறியவேண்டுவன குரு முகமாகவே அறிதல் வேண்டும். கண்டாம் என்பது அகாரம், கோணம் என்பது உகாரம், தீர்க்க கோணம்-

ஊகாரம், பசு — ஆன்மா, மகாரம். லம்பஞ — விந்து இவைகள் குறியீடுகள்.

பன்னிரண்டு கலைப்பிராஸாதத்திலும், பதினாறு கலைப்பிராஸாதத்திலும் சமனை வரையில் பாசக்கூட்டம். உன்மனை அந்தத்தில் பிராஸாத மந்திர வாச்சியராகிய பரசிவன் விளங்குகிறார். தீர்க்கப் பிராசாதம், இரஸ்வப்பிராசாதம் எனப் பிராசாதம் இருவகையுண்டு. ஆதி சூனியம், மத்தியசூனியம், அந்திய சூனியம் என சூனியம் மூன்றாம்.

கலைகளின் வடிவு பிரஸ்தாரம் என்று பேசப்படும். பிராஸாத கலைகளின் வடிவுகளைத் தனித்தனியே அறிந்து தியானிக்கவேண்டும் என்பர்.

பிராஸாத மந்திர கலைகளின் தானங்களும், ஆறு அத்துவாக்களின் வியாப்தியும், காரணேசுவரரும் வருமாறு:— சிவபீஜம் குஹ்யப் பிரதேசம் முதல் நாபி வரை வியாபித்துள்ளது. அப்பால் பிருதிவி முதல் பிரகிருதி வரையில் ஔகாரம் வியாபித்துள்ளது. அது தனது காரணேசுவரராகிய பிரமா வசிக்கும் இடமாகிய இருதய கமலத்தில் உள்ளது. பிருதிவிக்கு அப்பால் கலாதத்துவம் வரையில் வியாபித்து விஷ்ணுவைக் காரணேசுவரராக உடைய உகாரம் கண்டத்தில் இருக்கிறது. அப்பால் மாயை வரையில் வியாபித்து உருத்திரனைக்காரணேசுவரராகவுடையமகாரம்தாலுஸ்தானத்தில் இருக்கிறது அப்பால் சுத்தவித்தை ஈசுரம்என்னும்

இரண்டு தத்துவங்களையும் வியாபித்திருக்கின்ற அநந்தேசுவரரைக் காரணேசுவரராகவுடைய விந்துவானது புருவமத்தியஸ்தானத்தில் இருக்கிறது. அப்பால் சாதாக்கியம் சத்திஎன்னும் இரண்டு தத்துவங்களையும் வியாபித்திருக்கின்ற சதாசிவனைக் காரணேசுவரராகவுடைய அர்த்த சந்திர — நிரோதினி — நாத — நாதாந்த கலைகள் நான்கும் பிரமரந்திர ஸ்தானத்தில் இருக்கின்றன. அப்பால் சத்தி, வியாபிநி, சமனை, உன்மனை ஆகிய கலைகள் நான்கிற்கும் பிரமரந்திரம் முதல் துவாதசாந்தம் வரையில் ஸ்தான வியாப்தி. அநாகதசிவன் காரணேசுவரர். அதற்கப்பால் பரசிவம் தத்துவங்களைக் கடந்திருக்கும்.

இனி, மேதை என்னும் ஔகாரம் அக்கினி ஜுவாலை நிறம், ஊகாரம் சூரிய சந்திர நிறம், மகாரம் மின்னல் நிறம், விந்து தீபநிறம் எனக் கலைகளின் நிறம் சொல்லப்படும். அர்த்த சந்திரன், நிரோதினி இரண்டும் அர்த்த சந்திர நிறம், நாதம் மணி நிறம், நாதாந்தம் மின்னல் நிறம் ஆம். அதற்குமேல் சத்தி சதசூரியப் பிரகாசமும், வியாபிநி சகத்திர சூரியப் பிரகாசமும், சமனை கோடிசூரியப்பிரகாசமும், உன்மனை அளவில்லாத சூரியகாந்தியும் உள்ளது எனப் பேதம் அறியவேண்டும். உன்மனைக்கு அப்பால் உள்ள பரசிவன் தெளிந்த கண்ணாடி நிறமும், சரற்காலத்துத் தண்ணீர் நிறமும் உடையவர் என்று அறிக.

இங்ஙனம் ப்ராஸாத மந்திரத்தின் உத்தாரம், மாத்திரை, பிரஸ்தாரம், வியாப்தி, வர்ணம் இவைகளை அறிந்து தியானிப்பவர் சிவசொரூபத்தை அறிந்தவராவர்.

இவற்றுள் உத்தாரமாவது கலைகளின் முறை, மாத்திரையாவது உச்சரிக்கின்ற நொடிக்காலம், பிரஸ்தாரம்-வரிவடிவு, வியாப்தி - தத்துவங்களை வியாபித்தல். வர்ணம் - நிறம். இவற்றின் விரிவுகளை 'பிராஸாத மந்திரப் பிரபாவம்' என்னும் மந்திரசாரத்தில் காண்க.

சிவமந்திரங்களுக்குள்ளே முக்கியமானது பிராஸாதமந்திரம், பிராஸாதம் நாதமயமானது. நாதம் பரசிவனிடத்தில் உண்டானது. நாதத்தில் விந்துவும், விந்துவிலிருந்து முதல் உயிர் ஸ்வரமும் உண்டாயின. அதிலிருந்து எல்லா வன்னங்களும் உண்டாயின. ஸ்வரம் இரண்டிரண்டாய் இருக்கும், அவை பதினான்கு. உயிர் பதினாறு. ககாரம் முதலானவை மெய் எனப்படும், அவை—34. அவற்றிற்கு வியஞ்சனம் என்று பெயர். அவற்றால் பரம், அபரம் என்னும் இருவகையான சாஸ்திரங்கள் உண்டாயின. நாதம் ஒன்பது கண்டம், ஐம்பது பீஜம் உள்ளது. இவற்றின் விரிவைக் காமிகம், காலோத்தரம் முதலியவற்றால் அறிக.

> "முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியா
> ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்
> செப்ப அரிய சிவம்கண்டு தான்தெளிந்
> தப்பரி சாக அமர்ந்திருந் தாரே"

என்பது —திருமந்திரம்.

"நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும், பேணு தத்துவங்கள் என்னும் பெருகுசோ பானம் ஏறி, ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்......" எனச் சேக்கிழார் சுவாமிகள் கூறியருளினார்கள்.

முப்பத்தாறு தத்துவங்களையும் ஏறிச்செல்லும் படிக்கட்டுகளாகக் கொண்டு தத்துவங் கடந்த பரம் பொருளாகிய சிவத்தைக் கண்டு ஆன்மா சிவமாந்தன்மைப் பெருவாழ்வடைகின்றது என்பது இதன்கருத்து.

ஏகதேச அறிவினால் சுட்டி உணரப்படும் பிருதிவி தத்துவம் முதல் சிவதத்துவம் ஈறாகிய பிரபஞ்சத்தை ஒவ்வொன்றாகச்சுட்டி அசத்து என்றுகண்டு கழித்துக் கொண்டு சென்றபோது முடிவின்கண் விஷயமாவது சத்தே ஆகும். அந்தச் சத்தானது ஒரோவொன்றாகச் சுட்டி அறிந்து வந்த ஆன்மாவுக்கு வேறாகிய சிவ ஞானமே ஆம். அசத்தை அசத்தென்று அறிவினால் ஒருவிக்கண்டபோது, உளதாகிய சத்தினை ஆன்மா வானது அடிமையாய்ச் சென்று சத்தின் வசத்ததாய் அதனை உணர்ந்தால், சுட்டி அறிவதாகிய ஏகதேச அறிவைச்செய்யும் பொது இயல்பு ஆன்மாவை விட்டு நீங்கும். ஆதலால், அந்தச் சத்தானது மற்றோர் அசத்து அன்று. பின் அது பரஞான சொரூபமே ஆம்.

பிருதிவி முதல் நாதம் ஈறாகிய பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்று என்று ஒவ்வொன்றாக

வைத்து நோக்கி, அசத்து என்று கழித்து, அங்ஙனம் கண்ட தன் அறிவின்கண்ணே சுட்டுணர்வு இன்றி நின்ற சத்தாகிய சிவத்தை ஆராய்ந்து, அந்தச் சிவ ஞானத்தினாலே ஆசாரியன், 'சோயமாத்மா' அது இந்த ஆன்மா; 'சிவோயம் அஸ்தி' சிவன் இதுவாய் இருக்கின்றான் என்று தன்னுள்ளே பாவித்து; 'தத்துவமசி' அது நீ ஆகின்றனை, 'சிவத்துவமசி' நீ சிவன் ஆகின்றனை என்று அறிவுறுக்கும் வேதாந்த சித்தாந்த மகா வாக்கியப் பொருளை நாடோறும் பயின்று,—

"சிவோகம் அஸ்மி சித்தாந்தே வேதாந்தே சோகம் அஸ்மிது" வேதாந்தம் 'சோகம் அஸ்மி' என்று கூற, சித்தாந்தம் அதனைச் 'சிவோகம் அஸ்மி' என்று கூறுமாற்றால், 'சோகம் அஸ்மி' அவன் நான் ஆகின்றேன் என்றேனும், 'சிவோகம் அஸ்மி' சிவன் நான் ஆகின்றேன் என்றேனும் பாவிப்பானாயின் அந்தப்பாவனையில் விளங்கும் சிவனால் அநாதி கூடிய பொது இயல்பையும், அதற்கு ஏதுவாகிய மாயாகன்மங்களையும் தான் விட்டு நீங்கும் இயல்பு 'கருடோகமஸ்மி' நான் கருடன் ஆகின்றேன் என்னும் கருடமந்திர தியானத்தில் விளங்கும் கருடனால் அந்தக் கருடபாவனை விஷத்தைப் பிரத்தியட்சத்தில் தீர்த்துவிடுதல் போலாம்.

"இந்தத் தேவதை வேறு, நான் வேறு என்று எவன் மற்றோர் தேவதையைப் பாவனை செய்யுங்கால் அவன் அந்தத் தேவதையை அறிவானல்லன்; அது

பற்றி அவன் தேவர்களுக்குப் பசுப்போலாகின்றான். ஆதலால், எவன் நான் பிரமம் என்று அபேத பாவனை பண்ணுகின்றானோ, அவன் ஈதெல்லாம் (உலகெல்லாம்) ஆகின்றான்" என்று பிருகதாரணிய சுருதி சொல்லுகின்றது.

"சிவன் வேறு, நான் வேறு என்னும் துவித பாவனையை விடுத்து, எந்தச் சிவன் உளரோ அந்தச் சிவன் நான் என்று எக்காலமும் அத்துவைத பாவனை செய்க" என்று சர்வஞ்ஞானோத்தராகமம் கூறுகின்றது.

"பேத மாகிய பாவனை பேணுவ தெல்லாம்
ஏத மாகிய பந்தமே எனதியா னெனுமால்
போத ஆருயிர் அபேதபா வனைபுரி வஃதே
மாத ராருயர் முத்தியென் றுரைத்திடும் மறையும்"

எனத் திருவானைக்காப்புராணத்தில் கவிராக்ஷஸ - ஸ்ரீ கச்சியப்ப முனிவர் அருளிச்செய்தனர்.

இவைகளால் துவிதபாவனையை விடுத்து அத்துவித பாவனைபுரிதல் வேண்டும் என்பது பெறப்பட்டது. இந்தப்பாவனை மாயாவாதிகள் கூறும் பாவனைபோல்வதன்று என்க.

இனி, "கருட தியானத்தினால் விஷமானது நீங்குகின்றது; அங்ஙனம் அவன் (முக்தன்) சிவானந்த பர தியானத்தினாலே சர்வபாசங்களினின்றும் நீங்கி

முத்தியைத் தலைப்படுகின்றான்' என்று வாதுளாகமம் கூறுகின்றது.

கருடன் உருவம் கருதும் அளவில்
பருவிடம் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவம் குறித்தஅப் போதே
திரிமலம் தீர்ந்து சிவனவன் ஆமே"
என்பது —திருமந்திரம்.

ஆன்மா சிவஞானத்தினால் சிவத்தை உணர்ந்து, அச்சிவத்தில் வியாப்பியமாய் நின்று அங்ஙனம் அறியும் பொருளாகிய தன்னையும் அறியும். இதுபற்றியே "ஆன்மாவிலே (அருளினாலே) பரமான்மாவைக் காண்கின்றான்" என்றும், "எந்தத் திண்ணிய அறிஞர்கள் ஆன்மாவில் இருப்பவராக அவரைக் காண்கின்றார்களோ அவர்களுக்கு நித்திய ஆனந்தம்; ஏனையோர்க்கு இன்றாம்" என்றும் சுருதிகள் கூறுகின்றன. "ஆதலின், சிந்தையின்கண்ணே அருட்சத்தியோடு இயைந்து சிவத்தை எவர் பாவிக்கின்றார்களோ அவர்களுக்கு நித்தியமாகிய ஆனந்தம்; ஏனையோர்க்கு இன்றாம் எனச் சுருதிகூறிற்று" என்று ஸ்மிருதி கூறுகின்றது. இதனைத் திருமூலதேவநாயனார்,

"தன்னில் தன்னை அறியும் தலைமகன்
தன்னில் தன்னை அறியில் தலைப்படும்
தன்னில் தன்னை அறிவிலன் ஆயிடில்
தன்னில் தன்னையும் சார்தற் கரியனே."

என அருளிச் செய்வாராயினர். தன்னில் - ஆன்மா வில். தன்னை-சிவபிரானை. தலைமகன்-பக்குவான்மா. இக்கருத்துப்பற்றியே திருநாவுக்கரசுசுவாமிகள்

**"என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்**
**தன்னை நானும்முன் ஏதும் அறிந்திலேன்**
**என்னைத் தன்னடி யானென் றறிதலும்**
**தன்னை நானும் பிரானென் றறிந்தேனே."**

எனத் தனித் திருக்குறுந்தொகையில் அருளிச்செய்தார்கள்.

சிவபிரான் திருவடிகளில் 'நான் என்று ஒருமுதல் காணப்படுமாறில்லை என்று உணர்ந்து முழுவதும் சிவமே' என்று காணும் தெளிவுக் காட்சியினால் அச்சிவத்தோடு ஒற்றுமைப்பட்டு நின்று அவரது திருவடிகளை உணருங்கால், அச்சிவம் அவ்வான்மாவுக்குப் பரபோகமாய் மேன்மேல் விளைகின்ற பொலிவினையுடையதாகும். "ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்" எனவும், "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை" எனவும், "ஒல்லையாறி உள்ள மொன்றி" எனவும் போந்த திருவாக்குக்களும் அக்கருத்தே பற்றியனவாம்.

ஒரு பொருளை அறிந்த மாத்திரத்தினால் அதன் கண் இச்சை நிகழுமாறுபோல, இச்சை நிகழ்ந்த மாத்திரத்திலே அப்பொருளைப் பெறுதல் கூடும் என்பது

உலகத்தில் இல்லை. ஆதலின், ஆன்மாவானது இச்சையாகிய பத்திமாத்திரத்தினால் சீபாதத்தை அடையுமாறு யாங்ஙனம்? என வினவி அறியலுறுவார்க்குச் சிவபிரான் ஆன்மாவில் விரவி நின்று அறிவித்த சிவானந்த விஷயத்தை ஆன்மா அறிந்தது என்றும், அவ்வான்மாவை அதிட்டித்து நின்ற தாம் அறிந்தது என்றும் பிரித்தறிய வாராது இருவகை அறிவும் ஒன்றனை ஒன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்துவரும் உபகாரத்தை அவ்வான்மா மறவாது உறுதியாகப் பற்றி அவரது அருளின் வழி நிற்றலால் அவரது சீபாதத்தை அடைதலாகிய சிவானந்தாநுபூதி நிட்டையை அடையும் என்க.

அன்பு, பத்தி என்பன இச்சைமீதூர்தல் எனப் பொருள்படும். சிலர் பத்தியாவது நிர்க்குணப் பிரம நிலைக்குச் சாதகமாகப் பிரமா, விட்டுணு, உருத்திரர் என்னும் சகுண மூர்த்திகளிடத்து வைக்கப்படும் அன்பு என மயங்குவர்.

மாயாவாதிகள் நிர்க்குணப் பிரம நிலையையே சீவன் முத்தர் நிலை என்பர். இந்தச் சீவன் முத்தி நிலைக்கு மேற்பட்டது அதிகாரமுத்தி நிலை, இதற்கு மேற்பட்டது போகமுத்தி நிலை, இதற்கு மேற்பட்டது லயமுத்தி நிலை, இதற்கு மேற்பட்டது பரமுத்தி நிலை. இந்தப் பரமுத்தி நிலையையே சீவன்முத்தர் நிலை

என்பர் சித்தாந்த சைவர்கள். இந்தப் பரமுத்தி நிலையில் இச்சையாகிய அன்பு நிகழாத இடத்துச்சிவானந்த அநுபவம் ஒருபோதும் சித்திக்காது.

சூரியன் காலைப்பொழுதில் மேக படலத்துள் மறைந்து, அப்படலம் சிறிது நீங்கியபொழுது தன் ஒளி ஏகதேசமாய்ச் சிறிது விளங்கி, பின் மேக படலம் முழுவதும் காற்றால் அடியுண்டு சிதறிச் சத்தி மடங்கி விட்டு நீங்கியபோது அவ்வொளி எங்கும் வியாபித்து விளங்கும். அதுபோல, ஆன்மாவும் கேவலாவத்தையில் மலத்தினால் மறைப்புண்டு, சகலாவத்தையில் தன்னறிவு ஏகதேசமாய்ச் சிறிது விளங்கிப் பிரபஞ்ச விஷயங்களை அறிந்து அதனுள் அழுந்தும். பின்பு சிவபிரான் திருவருளால் அம்மல சத்தி பற்றறக் களைந்து அடக்கப்பட்டபோது அவ்வறிவானது சுத்தாவத்தையில் வியாபகமாய் விளங்கிப் பிரிவின்றிச் சிவானந்தத்தைத் தலைப்பட்டு அந்த நேய இன்ப சிவத்தில் அழுந்தும்.

"பகல் எனப்படும் சகலாவத்தையில் சிவனை வழிபடற்க, இரவு எனப்படும் கேவலாவத்தையில் அவனை வழிபடற்க, பின் கேவல சகலம் ஒழிந்து எஞ்ஞான்றும் சுத்தாவத்தையில் அவனை வழிபடுக" என்று சிவாகமம் கூறிற்று.

(பூர்புவ: ஸ்வ:) "தத்சவிதுர்வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி தியோயோ ந: பிரசோதயாத்" என்பது காயத்திரி மந்திரம்.

"எந்தச் சிவசூரியனது (ஞானேச்சாக்கிரியா) சக்தி யாகிய ஒளியானது எங்கள் ஞானேச்சாக்கிரியா சக்தி களைச் செலுத்துகின்றதோ? அந்த முக்கியப் பொருளை (அந்தப் பராசக்தி ஒளியை)த் தியானிக்கின்றோம்" என் பதே சமஸ்த வேதங்களின் சாரமாகிய மகாமந்திர காயத்திரியின் பொருளாம்.

இதற்கு உபப்பிருங்கணம் வருமாறு:

**"சிவார்க்க சக்திதீதித்யா சமர்த்தீகிருத சித்திருசா!
சிவம் சக்தியாதிபி: சார்த்தம் பச்யத்யாத்மா கதா**
என்பது. விருதி:11"

"சிவசூரியனுடைய பராசக்தி ஒளியினால் வன்மை யாக்கப்பட்ட ஞானக்கண்ணினால் ஆன்மாவானது சிவ சக்தியோடு இணைந்து சிவனைப் பார்க்கின்றது, மலம் மறைந்து போயிற்று." என்று அக்காயத்திரிப் பொரு ளைச் சிவாகமம் விளக்கிற்று.

காயத்திரியிலே தேவசவிதா எனப்பட்டவர் நாரா யண சூரியனோ மற்றொன்றோ? என்னும் ஆசங்கை எழு மன்றோ! அஃது எழவொட்டாமல் 'தேவ' என்றது சிவ னையும், சவிதா என்றது சூரியனையும் உணர்த்தும் என் பது போதரச் சிவார்க்கர் அஃதாவது சிவாதித்தன் என்று கூறப்பட்டது. படவே, நமது கண்களுக்கு விஷயங்களைப் புலப்படச் செலுத்தும் புறத்துள்ள சூரி யனுக்கு இயையச் சிவாகமம் ஒளி என்றும், சிவத்துக் கியையச் சக்தி என்றும் கூறிற்று. காயத்திரி சுருதி

யானது ஒரு மொழிகொண்டு ஒளியையும், பராசக்தி யையும் ஒருங்கு உணர்த்துமாறு 'பர்க்கஸ்' என்று கூறிற்று.

"சேதனு சேதனப் பிரபஞ்சம் அனைத்தையும் பிரகாசிப்பித்தலால் (ஹ) ப எனவும், அவற்றை இச்சிப் பித்தலால் (ர) ர எனவும், அவை அனைத்தும் ஒடுங் கித் தோற்றுதலால் (ம) க எனவும் பகுத்துப் பொருள் கொள்ளுதற்கு இயைந்த பர்க்க சப்தம் சிவ சத்தியினின்று வேருகாத சிவனுக்குப் பெயராகப் போந்தது" என்று மைத்திராயணேபநிடதம் கூறுகின் றது. இதனுல் பர்க்கஸ் என்றது ஞான இச்சாக் கிரியா ரூப பராசத்திக்குப் பெயராயிற்று. பர்க்கஸ் என் றது த்வனி மொழியாய் ஒளிக்கும் பெயராமாறு தெளி யப்படும்.

'பிரசோதயாத்' என்னும் மொழி செலுத்துகின் ருர் எனப் பொருள்படும். அங்ஙனமாயின் ஆன்மாக்க ளாகிய எங்கள் ஞான இச்சாக்கிரியைகளை உண்ணின்று செலுத்துபவர் சிவசத்தி என்றே பெறப்படுகின்றது. எங்கே ஆன்மாவைச் செலுத்துகின்ருர்? எனின், பெத்த காலத்திலே திரோதான சத்தியாய் நின்று பிர பஞ்சவிஷயத்தை அறிந்து அநுபவிக்குமாறும், முத்தி காலத்திலே அருட்சத்தியாய் நின்று ஞேயப்பொருளா கிய சிவத்தை அறிந்து சிவாநுபவத்தை அநுபவிக்கு மாறுமாம் என்க.

பொதுவகையால் பெத்த காலத்தில் சிவசூரியனார் ஆன்மாவின் ஞான இச்சாக் கிரியைகளைச் செலுத்தி அறிவித்து நிற்றல் அதிசூக்கும பஞ்ச கிருத்தியம் ஆம். சிறப்பு வகையால் முத்தி காலத்தில் சிவசூரியன் ஆன்மாவின் ஞான இச்சாக்கிரியைகளைப் புறத்தே மற்றொன்றினும் செல்லவொட்டாது தடுத்து, ஞேயப் பொருளாகிய தம்மை உணருமாறே செலுத்தி, தாமும் அங்ஙனம் சென்று உணருங்கால், ஆன்மசிற்சத்தியி னிடத்துத் தாம் ஏகமாய் விட்டு நீங்காதவராய், அந்த ஞேய விஷயத்தை உணர்வோராவர். இங்ஙனம் சிவ பிரான் ஆன்மாவுக்குச் செய்யும் உபகாரம் அதிசூக்கும நடனம் எனவும், பரநடனம் எனவும் கூறப்படும். ஆன்மா எனப்படும் மன்றிலே சிவபிரான் பரநடனம் செய்கின்றார் என்க.

ஆன்மாவைச் சிவஞேய விஷயத்தில் செல்லுமாறு ஆட்டி, ஆட்டுதல் மாத்திரத்தோடு அமையாது அவ் வான்மாவோடு உடனாய் நின்று ஆடியும் நிற்றலாகிய பரநடன நிலையை நோக்குந்தோறும் நோக்குந்தோறும் கரும்பிரதம், தேன், பால், கனி, அமுதம், கற்கண்டு, கருப்புக்கட்டி என்னும் சுவைப் பொருள்களையெல்லாம் கலந்தவிடத்து உளதாகிய சுவையானது இவ்வியல் பிற்று எனப் பிரித்தறிய வாராமைபோல, சொல்லுதற் கரிய பேரின்பம் ஆன்மாவுக்கு எய்தும் என்பர். இதனைச் சிவஞானசித்தியார் பதினொராஞ்சூத்திரம்

பன்னிரண்டாவது திருவிருத்தம் "கரும்பைத் தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியை யொத்திருப்பன் அந்த முத்திதனிற் கலந்தே" எனக் கூறியது காண்க. பரநடனதரிசனம் செய்வோருக்கு எய்தும் மெய்ப்பாட்டை இத்திருமந்திரத்தால் அறியலாம்: வருமாறு:-

**"புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோல்**
**களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்**
**அளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்**
**ஒளிக்குள் ஆனந்தத் தமுதூறும் உள்ளத்தே"**

—2778

இனி, 'தத்துவமசி' அது நீ ஆகின்றனை எனவும், 'சோகமஸ்மி' அவன் நான் ஆகின்றேன் எனவும், 'சோயம் அஸ்தி' அவன் இது ஆகின்றான் எனவும் மூவிடம்பற்றி நிகழும் மகாவாக்கியங்களுள்ளே,—

'அது நீ ஆகின்றனை' என்னும் முன்னிலை மகா வாக்கியத்தில் அது என்பது சிவமாகிய ஒருபொருள், நீ என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருள் ஆகலின், ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி? எனவும்,

'அவன் நான் ஆகின்றேன்' என்னும் தன்மை மகா வாக்கியத்தில் அவன் என்பது சிவனாகிய ஒரு பொருள், நான் என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருள், ஆகலின் ஒரு பொருள் மற்றொரு பொருள் ஆதல் எப்படி எனவும்,

'அவன் இது ஆகின்றான்' என்னும் பட்டர்க்கை மகாவாக்கியத்தில் அவன் என்பது சிவனாகிய ஒரு பொருள், இது என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருள் ஆகலின், ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி? எனவும் ஐயம் நிகழும் அன்றே! அவ்வையம் நீங்குமாறு; அவ்விரு பொருட்கும் உளதாகிய சம்பந்த விசேடம் உணர்த்துதலே அத்துவிதம் என்னுஞ் சொற்குப் பொருளாம். அதுபற்றியே,

"சொன்ன தத்துவ மசியெனும் சுருதியின் மொழியும்
மன்னு காரண பதியும்நான் எனவரும் பசுவும்
என்ன வேபொருள் இருமைகண்டியைந்துவேறன்மை
தன்னை நாட்டிய தல்லது தனியென்ப தின்றே"

எனப் பெரியோர் கூறினர். இதனைச் சிவஞானபாடியத்தில் அத்துவைத வாக்கியத்தெளிவுபற்றி அறிக. விரிக்கிற் பெருகும்.

இனி, "பிரமபுரம் என்பது சரீரம். இந்தச் சரீரத்தினுள்ளே புண்டரீக வீடு உள்ளது. இந்தப் புண்டரீக வீட்டினுள்ளே தகராகாசம் உள்ளது. தகராகாசம், தகராம்பலம் என்பன ஒரு பொருட்கிளவி. தகரம்—சிறுமை. சிறுமை அம்பலம் சிற்றம்பலம் என்றாயிற்று. இந்தச் சிற்றம்பலம் பராசத்தியின் பெயர். இந்தத் திருச்சிற்றம்பல ஆகாயத்தின்கண்ணே பிரமம் எனப்படும் மகாதாண்டவேசுரர் உளராயினர்.

இவரையே நாடவேண்டும், அறியவேண்டும் என்று சாந்தோக்கிய உபநிடதம் கூறியது. இந்தச்சிற்றம்பலம் அருட்சத்தி என்பதனைத் திருவுளத்தடைத்தன்றோ அருண்மொழித்தேவர் "அண்ணலார் தமக்களித்த மெய்ஞ்ஞான மேயான அம்பலமும்" என்று அருளிச் செய்தார்கள். ஆகவே, அம்பலம் என்பது மெய்ஞ் ஞானமாகிய அருட்பராசத்தியின் மேலாயவாறு காண்க."

**அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்**
**பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்**
**தெண்டினிற் சத்தி திருவம் பலமாகக்**
**கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே.**

—2749

**இருவருங் காண எழிலம் பலத்தே**
**உருவோ டருவோ டருபா ருபமாய்த்**
**திருவருட் சத்திக்குள் சித்தனு னந்தன்**
**அருளுரு வாகநின் றுடலுற் றுனே.**

—2790

"பூமியும் வானமும் ஆகிய இரண்டும், தீயும் வாயுவும் ஆகிய இரண்டும், சூரியனும் சந்திரனும் ஆகிய இரண்டும், மின்னலும் நட்சத்திரம் ஆகிய இரண்டும் இவ்வுலகத்திலே (பரமான்மாவாகிய) அவரைப்பற்றி எது இருந்ததோ? எது இல்லையோ? அவை எல்லாம் அந்தத் தகராகாசத்தினுள்ளே (திருச்சிற்றம்பலத்தி னுள்ளே) அடங்கின" என்று சாந்தோக்கிய சுருதி

கூறுகின்றது. மூலப்பிரகிருதி கடந்து, அதற்கப்பால் உள்ள சூக்குமப் பிரகிருதி கடந்து, அதற்கப்பால் உள்ள பரப்பிரகிருதிக்கு அப்பாற்பட்டு, மீளப்பிறவியிற் செலுத்தாத சிவதத்துவத்தின் பாலதாகிய திருச்சிற்றம்பல வாது உபாசனையானது மந்த புத்தியினருக்கு விளங்காது. இதனை,

**தீ முதல் ஐந்தும் திசையெட்டும் கீழ்மேலும்**
**ஆயும் அறிவினுக் கப்புறம் ஆனந்தம்**
**மாயைமா மாயை கடந்துநின் றார்காண**
**நாயகன் நின்று நடஞ்செய்யும் வாறே.**

—2766

"(சிவபிரானினின்று அபின்னமாய் இருத்தலால்) சிவம் நான் என்பவராயும், சிவமயமாயும், ஞானந்த சரீரியாயும், முப்பத்தாறு தத்துவ ரூபத்தன்மையை அடைந்து அநேக வடிவத்தையுடையராயும் உள்ளார் உமையம்மையார்" என்று ஆசுவலாயனஸ்மிருதி கூறுகின்றது.

"சிவ தத்துவம் முதல் பிருதிவிதத்துவம் ஈறாகச் சரீராதிகளையும், கடாதிகளையும் வியாபித்து நின்றமையால் சிவபிரான் விஷ்ணு எனப்படுவார்" என்று தீக்ஷித யோகிகள் ஆரம்பணாதிகரணத்தில் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

"யோகிகளுடைய அழியாத ஸ்தானம் வியோமம் (ஆகாயம்) எனப்படும் பரமபதமேயாம்" என்றும்,

"ஷடத்துவாதீதமாய்த் துரியம் எனப் பெயரிய முத்திஸ்தானம் பரமபதமே யாம்" என்றும்,

"சாந்திகலைக்குமேல் அத்துவாவின் முடிவிலே சாந்தியாதீத கலையினால் தூய்மை உண்டாகின்றது. அந்தச் சாந்தியாதீத கலை பரப்பிரகிருதியோடு இயைந் திருத்தலால் அதனைப் பரம வியோமம் என்பர்" என் றும் உபப்பிருங்கணங்கள் கூறுகின்றன. இதனால், முப்பத்தாறு தத்துவங்களுக்கு மேல் அஃதாவது அத் துவாவின் முடிவிலே உள்ள சிவதத்துவத்தின் பாற்பட,

"சமஸ்த அண்டங்களின் தொகுதியாகிய குமிழிக் கூட்டங்கள் தோன்றப்பெறும் இரத்தினாகரமாகிய பரப்பிரகிருதிரூப பராசத்தியே சிதம்பரம் (திருச்சிற்றம் பலம்) எனப்படும். இந்தப் பிரகாச ரூபத்தையுடைய பிரமம் ஆகாச சரீரம்" என்று சைவபாஷ்யகாரர் கூறி யிருக்கின்றார்.

"சிதம்பர சக்தி சரீரத்தினர் பரப்பிரம சிவ பிரான்" என்று தைத்திரீய சுருதியும்,

"எவருக்குப் பரம தேவியாகிய சக்தி உளரோ, அவர் ஆகாயம் எனப்படுவோர்" என்று உபப்பிருங்கண மும் கூறுகின்றன. இதனால், ஆகாயம் பராசத்தியின் மேலாயவாறு தெளியப்படும்.

"இந்த ஆகாயம் ஆனந்தம் ஆகாவிடின் யார் உயிர்ப்பார்? யார் பிழைப்பார்? என்று தைத்திரீயசுருதி கூறுதலால், ஆகாயம் எனப் பெயரிய பராசத்தியார்

*ஆனந்தரூபிணி என்றும் அறியப்படுகின்றது. இவற்றையெல்லாம் கீழேவரும் திருமந்திரங்கள் ஒருவாறு தொகுத்துக் காட்டுவனவாம்.*

தானே வெளியென எங்கும் நிறைந்தவள்
தானே பரம வெளியது வானவள்
தானே சகலமும் ஆக்கி அழித்தவள்
தானே அனைத்துள அண்ட சகலமே.

—1361

தானந்தம் இல்லாச் சதானந்த சத்திமேல்
தேனுந்தும் ஆனந்த மாநடம் கண்டீர்
ஞானம் கடந்து நடம்செய்யும் நம்பிக்கங்
கானந்தக் கூத்தாட ஆடரங் கானதே.

—2724

ஆனந்தம் ஆடரங் கானந்தம் பாடல்கள
ஆனந்தம் பல்லியம் ஆனந்தம் வாச்சியம்
ஆனந்த மாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே.

— 2725

தத்துவம் ஆடச் சதாசிவம் தானாடச்
சித்தமும் ஆடச் சிவசத்தி தானாட
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே.

—2789

ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலர்
ஆனந்த மாநடம் ஆரும் அறிகிலர்
ஆனந்த மாநடம் ஆரும் அறிந்தபின்
தானந்த மற்றிடம் ஆனந்த மாமே.

—2796

"உலகம் உண்டாய பின்னர்த்தான் தேவர்கள் உளராயினர்; அங்ஙனமாயின் எங்கிருந்து உலகம் தோன்றியது? என்று யாரறிவார்? எனவும்,

"பரமவியோமம் எனப்படும் திருச்சிற்றம்பலத்திலே எவர் பிரபஞ்சத்துக்கு அத்தியக்ஷ அதிபதியாய் நின்றாரோ? அவரே அதனை அறிவார்; மற்றெவரும் அறியார்" எனவும் (இருக்குவேதம்; பத்தாம் மண்டலம்: 129-ம் சூக்தம்: 6, 7 மந்திரங்கள்) வினா விடையாகக் கூறிற்று. அந்த அத்தியக்ஷர் யாவர்? எனின்,

"எது இதயத்துள் ஆகாசமாய் இருக்கின்றதோ? அதில் அனைத்தையும் வசீகரிப்பவரும், அனைத்துக்கும் அதிபரும், அனைத்துக்கும் ஈசானரும் ஆயினர் அமர்கின்றார்" என்று பிருகதாரணிய யோபநிடதம் கூறுமாற்றால், பரம வியோமமாகிய ஆகாயத்து அத்தியக்ஷர் ஈசானராகிய பசுபதியே ஆவாரென்க. இந்த அத்தியக்ஷர் சிவதத்துவத்தின் பாற்பட்ட சிவபெருமானே ஆவார். இவரே சமஷ்டி ரூப சதாசிவராகிய தாண்டவேசுரர் என்பர். இதுபற்றியே ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள்:—சிற்பரவியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று, பொற்புறநடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி" என்றும், திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்:—"சிற்றம்பல மேய-முற்று வெண்டிங்கள் முதல்வன் பாதமே-பற்று நின்றாரைப் பற்றா பாவமே" என்றும் திருவாய் மலர்ந்தருளுவாராயினர்.

வைதிக சைவர்களுடைய 'அபேத அத்துவித பாவனை' பரப்பிரகிருதிப்பாற்படு கின்றமையும், ஏனையோர் கூறும் அத்துவித பாவனை அதனின் வேறாய வாறும் நுனித்துணர்க.

திருமுறைகள் பன்னிரண்டனுள் திருமந்திரம் பத்தாம் திருமுறையாம். ஐந்து பிரம மந்திரங்களும் ஆறு அங்க மந்திரங்களும் ஆக மந்திரம் பதினொன்று. பத்தாவது மந்திரம் நேத்திரம் ஆகலின், இத்திருமந்திரம் நேத்திரம் போன்றது. இத்திருமுறை திருமந்திரம் என்றே பெயர் அமையப்பெற்றது சிந்திக்கத்தக்கதாம். இதன்கண் உள்ள மந்திரப் பகுதிகள் எல்லாம் ஆகம மந்திரங்களே. இம்மந்திரப் பகுதிகள் வடமொழி மந்திரங்களே ஆம். இம்மந்திர உச்சரிப்புக்கள் எவ்வாற்றானும் தமிழில் இல்லை என்பதைச் சாத்திரஞான முடையார் எவரும் அறிவர். ஆகலின், சமய நூலுட் புகுவோர் வடமொழியை இகழ்தலின்றி நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். தமிழ் இலக்கண இலக்கியம் வல்லோர் வடமொழி வியாகரணமும் தருக்கமும் கற்று வல்லராதல் இன்றியமையாதது. வடமொழியறிவு பெற்றோர் எவராயினும் சமயநூல்களிற் புகுதற்குரிய ஞானதீட்சை, ஞானபூசைகளையும் உடன் பெறுதல் சிவஞான விளக்கத்துக்கு ஏதுவாகும் என்க. மொழியறிவு வேறு, சமயசாத்திர அறிவு வேறு என்பது அறிஞர்க்கே புலனும். வடமொழி மந்திரம்

வேண்டாம் என்பவர் இத் திருமந்திர நூலை எவ்வாறு அறிய வல்லுநர் ஆவார். அவர் இத் திருமுறையை இகழ்ந்தவரே யன்றோ!

திருமூலதேவர் நந்திமரபில் வந்தவர்கள். திருநந்திதேவர்பால் உபதேசம்பெற்றுச் சிறந்தவர்களுள் ஒரு பகுதியார் திருமூலர், மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், கந்துருக்காலாங்கி, கஞ்சமலையன் ஆகிய எண்மராவார். இதனை;—

"மந்திரம் பெற்ற வழிமுறை 1 மாலாங்கன்
2 இந்திரன் 3 சோமன் 4 பிரமன் 5 உருத்திரன்
6 கந்துருக் காலாங்கி 7 கஞ்ச மலையனோ
டிந்த எழுவரும் என்வழி யாமே"

—69

என்னும் திருமந்திரம் உணர்த்தும். இந்தக் குரு பரம்பரைக்கு உரியனவாகச் சிறந்தன காரணாகமம், காமிகாகமம், வீராகமம், சிந்தியாகமம், வாதுளாகமம், யாமளாகமம், காலோத்தராகமம், சுப்பிராகமம், மகுடாகமம் என்பன. இவற்றுட்சில உபாகமம் என்பர்.

"பெற்றநல் ஆகமம் 1 காரணம் 2 காமிகம்
உற்றநல் 3 வீரம் 4 உயர்சிந்தம் 5 வாதுளம்
மற்றவ் 6 வியாமளம் ஆகும் 7 காலோத்தரம்
துற்றநற் 8 சுப்பிரம் சொல்லும் 9 மகுடமே."

என்னும் திருமந்திரம் (63) இவற்றை நன்குணர்த்தும்.

இனி, "அஞ்செழுத்தால் அங்ககரியாசப்பண்ணி" எனச் சிவஞானசித்தியார் சுபக்கம் சூத்திரம்-9: செய்-8 கூறிய விதி இங்கே காட்டக் காண்பது எத்தனை கோடி சென்மத்தில் செய்த நற்றவம் ஆம் என்பதை அநுபூதிமான்களே அறிந்து இன்புறுவர். ஏனையோருக்கு அவ்வருமை புலனாகாது.

திருவஞ்செழுத்தை விதிப்படி உச்சரிப்பார்க்கு வேண்டப்படும் பாவனை (சித்தி-சூத்-9; செய்-7) "கண்டவினையல்லனே" என்னும் திருவிருத்தமும் ஸ்ரீமாதவச் சிவஞானயோகிகள் பொழிப்புரையும் நோக்கித் தெளிக.

இப்புத்தகத்தின்கண் பிரமசொரூபப் பிரிவில் கண்ட செய்திகள் அனைத்தும் திருவருள் பெற்றுயர்ந்த தமர்கட்கே நன்கு விபரீதமின்றி விளங்கும். சித்தாந்த நுணுக்கம் செறிந்த பெரியோர் இதனை ஆராய்ந்து தெளிவாராக. "வேதாந்த மகாவாக்கியமும் சித்தாந்த மகா வாக்கியமும் பொருளான் ஒன்றென்பதூஉம் பெறப்பட்டது" என்ற அருளிப்பாடு எத்துணைத் தவமுடையோர்க்குத் தோன்றும்; ஆராய்க.

இனி, திருமூலதேவர் எழுந்தருளியுள்ள இத் திருவாவடுதுறையில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பெருங்கருணையுடன் இரண்டாவது திருமந்திர மாநாடு ஜய–தை-1௴த்தில் கூட்டியருளித் திருமந்திர

உபதேசத்தைச் செய்யத் திருவுளங்கொண்டு சிவயோ
கப்பகுதிக்குத் தமது ஆதீனத்துக் கல்விக் களஞ்சிய
மாகிய சரஸ்வதி மஹால் புத்தகசாலையில் உள்ள ஏட்டுச்
சுவடியொன்றை எடுத்து அநுக்கிரகித்து ஆராய்ந்து
அச்சிடுமாறு அடியேனுக்குக் கட்டளையிட்டருளினார்
கள். அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு அதனைப்
பிரித்தெடுத்து ஆராய்ந்தபோது உபதேசவாயிலாகவே
பெறவேண்டிய அத்துணைப் பெருமைவாய்ந்த இத்
திருமந்திரப் பகுதியை எல்லோரும் எளிதில் அறிந்
துய்யக்கொண்டருளிய கருணையின் சொரூபம் கருத்
தில் ஒன்றிக் கண்முன் தோன்றியது. திருமந்திரத்
தின் பெருமை எங்கே? எளியேன் சிறுமை எங்கே?
குருவருள் இருந்த படியைச் சிந்தித்தேன். மிகப்
பழைய சுவடியாயினமையின் அங்கங்கே சிதைவுகள்
காணப்பட்டன. இதனைப் பூர்த்திசெய்யவேண்டி ஏடு
தேடுகையில் மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பாண்டியன்
புத்தகசாலையில் ஒரு ஏடு கிடைத்தது. அவ்வேட்டுப்
பிரதி பெரிதும் சிதையாமல் நல்ல வடிவில் இருக்கக்
கண்டு திருவருளை வியந்தேன். ஸ்ரீ மீனாட்சியம்பா
சமேத ஸ்ரீ சொக்கலிங்க மூர்த்தியின் பெருங்கருணை
பாதுகாத்தருளியதை எவ்வாறு எளியேன் புன்
மொழியால் வெளிப்படுத்த இயலும்?

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் உத்தரவுப்படி
மதுரைத் தமிழ்ச் சங்கத்தை அணுகினேனாக. அங்கே

தமிழ்ச்சங்கக் கலாசாலைத் தலைமை ஆசிரியரும், செந்தமிழ்ப் பத்திராதிபரும், என்பால் அளவில்லாத அன்புடையவர்களும், ஸ்ரீ திருநாராயணையங்கார் ஸ்வாமிகளின் திருக்குமாரரும் ஆகிய ஸ்ரீ உ. வே. T N அப்பனையங்கார் ஸ்வாமிகள் தமது ஓய்வு நேரங்களிலெல்லாம் அடியேனுடனிருந்து வேண்டிய உதவிகளைச் செய்தார்கள்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தையும், பாண்டியன் புத்தகசாலையையும், தமிழ்ச்சங்கக் கலாசாலையையும் தோற்றுவித்துச் செம்மையுற நடத்திப் பாலவனத்தம் ஜமீன்தாரர்களாகிய ஸ்ரீ பொ. பாண்டித்துரைசாமித்தேவரவர்களுடைய தமிழாசிரியர்களாயுள் மூவர் இவ்வாதீனத்து மதுரை - ஸ்ரீ இராமசாமிபிள்ளை 1 ஸ்ரீ அழகிரிராஜு-2. ஸ்ரீ பழநிக்குமாரத்தம்பிரான் ஸ்வாமிகள்-3 ஆவார்கள். மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலையைச்சிறப்புற நடத்திப் பலமாணவர்களைத் தமிழகத்துக்குத் தந்த பெருமை ஸ்ரீமத் உ. வே. திருநாராயணையங்கார் ஸ்வாமிகளுக்கே உரியதாகும். ஸ்ரீமத் ஐயங்கார் ஸ்வாமிகள் வடமொழியும் செந்தமிழ்மொழியும் வல்ல அரும் பெரும் புலவர் பெருமான். அவர்கள் புலமையை அறிந்து பெருமகிழ்ச்சிகொண்டு விளங்கியவர்கள் சுன்னாகம்-ஸ்ரீ குமாரசாமிப் புலவரவர்களே. செந்தமிழுலகம் இதனைப் பெரிதும் அறியுமே

ஸ்ரீ திருநாராயணையங்கார் சுவாமிகளுடைய தமிழா
சிரியர்களில் ஸ்ரீ பழனிக்குமாருத் தம்பிரான் சுவாமி
கள் ஒருவர் எனவும், தம்பிரான் சுவாமிகளிடத்திலே
தான் ஐயங்கார் சுவாமிகள் சிறந்த பெருந்தமிழ் நூல்
களைப் பாடங்கேட்டார்கள் எனவும், இதனைத் தமது
தங்கையார் கைக்குறிப்பில் எழுதி வைத்திருக்கிறார்கள்
எனவும் ஸ்ரீமத் உ.பா.வே. அப்பணையங்கார் அவர்
கள் கூறியருளினார்கள். திருவாவடுதுறை ஆதீனத்துத்
தொடர்பு இச்சங்கத்துக்குப் புதிதல்ல, மிகப்பழமை
யானதே என அவர்கள் மனத்திருத்தி, என்னையும்
அருகிருத்திக் திருத்தியுடன் பிரதிசெய்து கொள்ளு
தற்குரிய எல்லா உதவிகளும் செய்தார்கள். அன்றி
யும், தமிழ்ச்சங்கத்தில் இப்பொழுதுள்ள மானேசர்
ஐயரவர்களும், புத்தகசாலை மேற்பார்வையாளர்களாகிய
ஐயங்காரவர்களும் அவ்வப்போது வேண்டிய உதவி
களையெல்லாம் அறிந்து செய்தார்கள். இச்செயல்
களால் அவர்கள் யாவரும் திருவாவடுதுறையாதீனத்
தில் கொண்டுள்ள ஒப்புயர்வற்ற பேரன்பை நன்கு
வெளிப்படுத்தினார்கள். அவர்கட்கு எளியேன் என்ன
கைம்மாறு செய்யவல்லேன்; என் நன்றி உரியதாகுக.

"ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொது என்பர்
ஆகின்ற ஆறு றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வைணவர்க்
காகின்ற நாலா றையைந்து மாயாவாதிக்கே"

—2179

தக்கார் பலரும் தாங்கள் பெற்ற சமயஞானத்தைப் பிறருக்கு எளிமையில் வழங்காதிருப்பதே 'இப் போலிகள் தலையெடுத்தற்குரிய இடங்கொடுத்தது' எனத் திருவுளங்கொண்டு அவர்கள் சமய அறிவை எல்லாம் வகையெல்லாம் பரப்ப முன்வந்து ஆவன செய்யப் பெரிதும் வேண்டப் பெறுகின்றார்கள். உயிர்க்குறுதி சமய ஞானமே.

சிவக்ஷேத்திர குருக்ஷேத்திர பரிபாலனங்களும், சித்தாந்த சைவ பரிபாலனம் செந்தமிழ்ப் பரிபாலனங்களும் தமது ஆதீன குரவர்கள் செய்து வந்த செந்நெறிகளிற் பிறழாது செய்தருளுவதுடன் சித்தாந்த சைவ மாநாடுகள்—திருமந்திர மாநாடுகளையும் செவ்விய முறையில் நடாத்துவித்துத் தமிழ்ப் புலவர்களுக்கெல்லாம் தாயகமாக விளங்கிப் பெருங்கீர்த்தியுடன் மெய்கண்ட சாத்திரப் பிரதிட்டாசாரியராக எழுந்தருளி மெய்கண்டசாத்திரங்கள் பதினான்கையும் தமது ஆதீனத்துப் பழைய உரைகளுடன் சிறந்தனவாக அச்சிட்டுத் தமிழன்பர்களுக்கு இலவசமாக வழங்குவித்து சிவஞானச்செங்கோல் செலுத்திவரும்இவ்வாதீனத்து இருபத்தோன்றாவது குருமஹாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் திருவடிகளை அனவரதமும் சிந்தித்து — வந்தித்து — வாழ்த்துகின்றேன்.

இதன்கண் காணப்படும் பிழைகளை அறிஞருலகம் பொறுத்தருள வேண்டுகின்றேன்.

இங்ஙனம்,
சித்தாந்தசைவமணி-

| | |
|---|---|
| திருவாவடுதுறை | த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, |
| 18—1—55. | திருவாவடுதுறை ஆதீனவித்துவான். |

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமந்திரம்

## சிவயோகம் என்னும்

# சிவயோக சாரக்கட்டளை

"வேதத்தி னந்தமும் மிக்கசித் தாந்தமும்
நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்
ஓதத் தகுமெட்டின் யோகாந்த அந்தமும்
ஆதிக் கலாந்தமொ டாறந்த மாமே."

—2870.

இதற்கு வசனக்கிரமம் — கலாந்தம், நாதாந்தம் யோகாந்தம், போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் ஆக ஆறு. இந்தமுறையே [illegible]. ஆகை யால், கலாந்தமாவது:—

'கொள்கையி லான கலாந்தம் குறிக்கொள்ளில்
விள்கையி லான நிவிர்த்தாதி மேதாதிக்
குள்ளன வாம்விந்து முள்ளே யொடுங்கலும்
தெள்ளி யதனைத் தெளிதலு மாகுமே."

—2877.

இன்னம் புவனை கலைஞான தீபத்தில்:— "அமரிக் கும் புவனம் புவனத்தி லேவர் கலைகளாந்து — கலைக்கு நற் சத்திக ளெல்லாம் தெரிந்து செகடனைத்தும் —

*வளைக்கும் பரவிந்துத் தன்னு ளடங்கமெய்ஞ் ஞான விம்பம் — அளிக்கும் கலாந்தமும் தானுகி நிற்பவ ளம்பிகையே"* என்பது. மேல் நாதாந்தமாவது :—

**"மேவும் பிரமனே விண்டு வுருத்திரன்**
**மேவுமே யீசன் சதாசிவன் மிக்கப்பால்**
**மேவும் பரவிந்து நாதம் விடருரு**
**ஓவும் பொழுதணு வொன்றுள தாகுமே"**

—2374.

இன்னம் புவனை கலைஞான தீபத்தில்:— *"பிரி கினற் பூதத் தலைவரும் விந்துவும் விட்டகல — வருந் கின்ற நாதத்தே மான்கண் டதனுள் மணமடங்கத் — தருகின்ற மானும் நீங்கித் தனதுருவாய்த்—தெரி கின்ற நாதந்த நேசமு மாகும் திரிபுரையே"* என்பது. மேல் யோகாந்தமாவது:—

**"தேடும் இயம நியமாதி சென்றகன்**
**றூடும் சமாதியி லுற்றுப் பரசிவன்**
**பாடுறச் சீவன் பரமாகப் பற்றறக்**
**கூடு முபசாந்த யோகாந்தக் கொள்கையே."**

—2376.

இன்னம் புவனை கலைஞான தீபத்தில்:— *"விரிக்கும் இயம நியமா சனத்தின் விதியறிந்து—சரிக்கு மாபிலி னிலனைநேர் நிறுத்திச் சமாதிபெற்றே — இருக்கும் பொழுதி லுபசாந்த நிட்கள நேயமெய்திப் — பரிக்குந் தனியினி யோகாந்த மெங்கள் பராபரையே"* என்பது. மேல் போதாந்தமாவது:—

"உள்ள வுயிராற தாகு முபாதியைத்
தெள்ளி யகன்று நாதாந்தம் செற்றுமேல்
உள்ள விருள்நீங்க வோருணர் வாகுமேல்
எள்ளிடின் நாதந்தத் தேற்றிடும் போதமே"
—2375.

மேல் இன்னம் புவனை கலைஞான தீபத்தில் :— "அறையும் கலாந்தமும் நாதாந்த மும்அட்ட யோகாந் தமாம்— துறையும் செறிந்துபின் ஞாறு நீங்கித் துணிந்ததினே — நிறையுமப் போதத்தி னுள்ளே யடங்கிட நேயவின்பம்—உறையுமப் போதாந்த ரூபமு மாமெங்க ளுத்தமியே" என்பது.
மேல் வேதாந்தமாவது:—

"தானான வேதாந்தம் தானென்னும் சித்தாந்தம்
ஆனாத் துரியத் தணுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ் சேரச் சிவோகமாய்
ஆனா மலமற் றருஞ்சித்தி யாதலே."
—2372.

இன்னம் புவனை கலைஞான தீபத்தில் :—பறுவாக லஞ்சேர்த்து மேலாந் துரியத்தின் பாழறிந்து, நிறுவா மனத்தை நிறுவித்துப் பூரண நின்மலமாய்ப், பெறு வானும் பேறுமற் றென்றும் சிவோகப் பெரியவின்பம், உறுவார் உறுகின்ற வேதாந்த மெங்கள் உலகம் மையே" என்பது. மேல் சித்தாந்தமாவது:—

"நித்தம் பரனோ டிருந்து நீள்மனம்
சத்த முதலைந்தும் தத்துவத் தானீங்கிச்
சுத்த மசுத்தம் தொடரா வகைநினைந்
தத்தன் பரன்பால் அடைதல்சித் தாந்தமே".
—2373.

இன்னம் புவனை கலைஞான தீபத்தில்—"*அந்தத்தோ ராறிணாட் சைவசித் தாந்த மிரிதரித்து, விந்தாவும் நாதமும் யோகமும் போதமும் மேவு முபமார், இந்த வகையைந்திற் கப்புற மாமது வெய்தவென்றுக், அந்தரி பாதம் தொழுதிடிற் கூட்டுவன் சொல்லுகின்றேம்" எனவும்,*

*"புரையின்றிப் போக்கு வரவினை யோதிற்றுப் பூரண மாய்க், கரையின்றி வாக்கு மனதுங்கெட் டாது கடந்து நின்ற, பரையின் றிருவரு ளீதெனை யாதோ பாகர்வதப்பா, உரையின் றுறக்கத் திருப்பாதுக் காலெனன் அருமைப் பதுவே" எனவும் வருவது காண்க.*

"அந்தமோ ராறும் அறிவார் அதிசுத்தர்
அந்தமோ ராறும் அறியார் மலத்தர்
அந்தமோ ராறும் அறியா தவர்தமக்
கந்தமோ டாதி அறியவொண் ணாதே.
—2371.

ஆறந்த முஞ்சென் றடங்குமந் நேயத்தே
ஆறந்த நேயம் அடங்கிடும் ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய மோனம் சிவானந்த வுண்மையே.
—2382.

ஆறந்தம் முற்றும்.

# ஞானத்தில் சரியை

ஞானாசாரியன் அனுக்கிரகம் பெற்றுச் சுத்தத்துவா நிட்டையாக இருக்கவேணும். அது கூடாதொழியில் ஞானத்திற் சரியையாதி நான்கும் அநுட்டிக்கவேணும். அவற்றுள், சரியையாவது—தியானம், பஞ்சாட்சரசெபம். இதற்கு பீசம்—ஆனந்தப் பிரணவம். இதற்கு ரூபம்—ஆனந்த நிருத்த ரூபம். தியானம்—ஆனந்த நிருத்த தாண்டவம். அவர் பஞ்சாட்சர பரசிவமாக இருக்கிறவரென்று அறிந்து தியானிக்க. இதற்கு நியாசம்: யம் — ஈசானவக்த்ரம், வம் — தற்புருடவக்த்ரம், சிம்—அகோரவக்த்ரம், மம்—வாமதேவ வக்த்ரம், நம்—சத்தியோஜாத வக்த்ரம்; இவை முண்டமந்திர நியாசம். யம்—சிரசு, வம்—வதனம், சிம்—இருதயம், மம்—நாபி, நம்—பாதம்; இவை தெண்டமந்திர நியாசம். மேல் யம்—இருதயம், வம்—சிரசு, சிம்—சிகை, மம்—கவசம், நம்—நேத்திரம், அவ்வும்—அஸ்திரம்: இந்தப்படி அங்க நியாசம் கரநியாசம் பண்ணி முன்சொன்னபடியே ஆனந்த நிருத்த தாண்டவத்தை இருதயகமலத்திலே அநேக கோடி பாலாதித்தப் பிரகாச ரூபமாகத் தியானித்து அந்தப் பேரொளிக்குள்ளே தற்போதம் கெட அழுந்தியிருப்பது நிஷ்டையாம். இது கூடா தொழியில் உதயாதியில் எழுந்திருக்கிற போது அந்தத்தலம் திருவாரூராக நினைந்து, அதிலே புனர்சென்மமாகப் பிறந்ததாக நினைக்க. எழுந்திருந்து தியானிக்கிற போது ஞானக்கண்ணினாலே சிதம்பரத்தைத் தரிசித்துக் கனகசபாபதியைத் தியானிக்க. எழுந்திருந்து

வெளியே புறப்படுகிறபோது அருணாசலம் என்று நினைத்துக்கொண்டு தான் சஞ்சாரம் பண்ணுகிற இடமெல்லாம் திருக்கோயிலை வலம்வருவதாகவும், செய்கிற தொழிலெல்லாம் சிவனுடைய பணி விடையாகவும், எல்லாச் செயலும் சிவச் செயலாகவும், புசிக்கிற புசிப்பெல்லாம் சிவனுக்கு ஆகுதியாகவும், தோத்திரம் பண்ணுகிற நேரமெல்லாம் அருணாசலம் என்றும், திருச்சிற்றம்பலம் என்றும், சிவ சிதம்பரம் என்றும் சொல்லித் துவாதச நாமங்களாகிய மஹாதேவா! சம்போ! சங்கர! விருஷபத்துவச! சூலபாணீ! காமாரீ! தேவதேவ! ஸ்ரீகண்டா! கௌரீமனோகர! ருத்திர! கங்காதர! சிவசிவ! என்று ஓங்காராதி நமோந்தமாகத் திரி காலங்களிலும் தோத்திரம் பண்ணி இராத்திரி சயனத்தில் வடகாசியாகத் தியானித்துக் கொண்டு பரிபூரணத் தியானம் பண்ணி ஆனந்த நித்திரை செய்க இப்படி நாடோறும் அநுட்டித்து வர முன்னே சொன்ன நிட்டைக்கு ஒத்துப் பரபதம் அடையலாம்.

**ஞானத்தில் சரியை முற்றும்**

---

# ஞானத்தில் கிரியை

---

மேல் ஞானத்தில் கிரியை வருமாறு :—சூட்சும பஞ்சாட்சரம் ஓம். சர்வமந்திரதாரக சொரூபமாயும், சுத்தமாயும், அவ்வியத்தமாயும் இருக்கிற பிரணவமும் அகார உகார மகார விந்து நாதமும் கூடின பிரணவம் பஞ்சதேவதா சொரூபம். அகாரம் – இருதயம், உகாரம்—கண்டம், மகாரம் – தாலு, விந்து – இலாடம்,

நாதம்—அதற்குமேல் உள்ளது, அகாரம்—சத்தியோ ஜாதவக்த்ரம், உகாரம் வாமதேவ வக்த்ரம், மகாரம் அகோரவக்த்ரம், விந்து — தத்புருஷவக்த்ரம், நாதம் — ஈசானவக்த்ரம் ஆக இப்படி முகங்களை அறிக. நாதா தீதம் பரமசிவம், நாதம் கிரீடம், விந்து வக்த்ரம், மகாரம் இருதயம், உகாரம் குஹ்யம், அகாரம் பாதம் இப்படி சிவதநு. இந்த மந்திரம் உச்சாரணம்—மோன — தான— சாம—தீர்க்க—விருத்தி—குண சிவசாமமாயிருக்கிற பிரா சாத மார்க்கத்திலே இரட்சிக்கக் கடவதாம். அகாரம் பிரமா, உகாரம் விட்டுணு, மகாரம் உருத்திரன், விந்து ஈசுவரன், நாதம் சாதாக்கியம். மேல் தூல சூக்கும பரமாயிருக்கிற பஞ்சாட்சரவிதி.

ஓம் நமசிவாய என்றது சடாட்சரம். அட்சரங் களிலே முக்கியம் பிரணவம். ஞானநூல்களுக்கு ஆதி பிரணவம். ஆகையால், சர்வமந்திரங்களுக்கும் தாரக மாய் இருக்கிற பிரணவம் இன்றி இருக்கிற யாதொரு மந்திரம் உண்டோ? அந்த மந்திரத்துக்குச் சத்தியில்லை. ஆகையால், பிரணவமே சர்வ மந்திரங்களுக்கும் ஆதார பூதமாய் இருக்கும். பிரணவத்தோடு கூட்டி நகாராதி பஞ்சாட்சரம் செபிக்கிறது சடாட்சரம். இப்படிச் சொல்லப்படாநின்ற பிரணவமும் அகார உகார மகார விந்து நாதமாகிய பஞ்சாட்சரங்களோடும் கூடி ஷட் வர்க்காந்தமாக இருக்கிற அட்சரத்தோடும் கூடின பிரணவம் : அகாரம் சூட்சும பஞ்சாட்சரம். இது சர்வ சித்திகரம். இப்படி மந்திரசக்திகளை அறிந்து செபமாதி பண்ணவும்.

**ஞானத்தில்கிரியை முற்றும்.**

# ஞானபூசை

---

*இனி, மேல் ஞானபூசை :—* சிவப்பிரகாசத்தில்—
*“மண்முதற் கரண மெல்லாம் மருவசத் தாக்கி ஞானக், கண்ணினா லொன்றி யந்தக் கருத்தினா லவையும் நோக்கி, எண்ணியஞ் செழுத்து மாறி யிலைமறிவை யுணர்ந்து போற்றல், புண்ணியன் றனக்கு ஞான பூசையாப் புகழு மன்றே”* —*செய்யுள்* 97.

“உள்ளமே கோயில் உயர்நந்தி தேவன்
வள்ளலருள் மஞ்சனம் நேசமாம் புட்பம்
சொல்லுறு தீபம் சொரூபனை வேத்தியம்
அல்லுறு தற்சிவம் தானாதல் பூசையே.”
—*திருமந்திரம் ?*

“இந்துவும் பானுவும் இயங்கும் தலத்திடை
வந்திப்ப தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்
இந்துவும் பானுவும் இயங்காத் தலத்திடை
வந்திக்க நந்திக்கு மாமல ராமே.
—1852.

*இத்தலம் அறிவதற்கு உதாரணம் :—*

“மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு
மன்மனம் எங்கில்லை வாயுவும் அங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலயம் ஆமே.”
—620.

ஞானபூசை முற்றும்.

# ஞானத்தில்யோகம்

அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் என்கிற பஞ்சப்பிரணவமும் ஏகாட்சர சொரூபமாகிற அட்சரத்தை அறிந்து, அதனை மனத்திலே அழுத்தி, நிசத்திலே ஆசையுற்று, உச்சரிக்கிற விதி அறிந்து உச்சரித்து, அந்தவழியே சென்று, ஞானச்சுடரினைத்தூண்டி, அவ்வெயிற்றில் பொருந்தி, அந்த ஞானப்பிரகாசத்தில் முதிர்ச்சியாகிய பரைபொளியைக்கண்டு அதிலே விகற்பம் அற நின்றால் அதற்கு முதலாகிய சிவம் பிரகாசிக்கும். அந்தப்பரமானந்த சிவானுபவத்திலே தற்போத மற்றபேர் மகானுபாவர், சீவன்முத்தர், முமூட்சு, முத்திமங்கைவல்லியர். இத்திட்டை கூடாதபேர் தியானிப்பது ஆதார தரிசனம்:—

குதத்தானம்— மூலாதாரசக்கரம், பிருதிவிபூதம், சுவர்னவர்ணம், சதுர்த்தளம், வ–ஶ ஷ–ஸ வர்ணதி சொரூபிரகாசம் இப்படி சிலபேர் தியானிப்பார்கள்.

இலிங்கத்தானம்— சுவாதிட்டான சக்கரம், அப்பு தத்துவம், நீலவர்ணம், சடுத்தளம், ப–ம–ய–ர–ல இந்த அட்சரத்தில் பூரணமாய்ப் பிரகாசம் இருக்கும். இப்படி சிலபேர் சிந்திப்பார்கள்.

நாபித்தானம்— மணிபூரக சக்கரம், அக்கினிபூதம், இரத்தவர்ணம், தசதளம், ட–ட–ண–த–த–த–த–ந–ப–ப இந்த தசதளவர்ணம் சிலபேர் தியானிப்பார்கள்.

தியானம் என்றும் தான் என்றும் இரண்டாக்காது அது அதுவாய் ஒளிப்பிரபைகளிலே அடங்கியிருப் பதுவும் ஒரு யோக நிட்டையாம்.

இது பத்து விதம். சோடசகலைப் பிராசாதத்தில் அந்தந்தக் கலைகள் தோறும் முன் சொன்னபடியே தியானித்து அது அதுவாக நிற்பதுவும் நிட்டையே யாம். இப்படித் தியானம் பதினாறு. சோடசகலையை யும் பிராசாத மந்திரத்திலே கோடீகரித்து ஏக பாவனையாக தியானிப்பதும் ஒரு நிட்டையாம்.

இருதய நடனம், சதாசிவத்து உச்சியில் நடனம், நாதாந்த நடனம், அசபா நடனம், ஆனந்த நடனம் இப்படி அஞ்சு தானத்திலும் அளவளாவ தியானிப்ப தும்ஒவ்வொருதியானத்தைப்பற்றி அந்தப் பேரொளிப் பிரகாசத்தில் ஆனந்தப் பிரணவ உச்சாரணம் பண்ணிக் கொண்டு தற்செயல் கெட நிற்பதும் ஒருநிட்டையாம். இப்படி அஞ்சுவிதம்.

அசபாமந்திரத்தை இரேசக பூரகங்களிலே மாறி உச்சரித்து அந்த ஒளிக்குள்ளே அடங்கியிருப் பதும் நிட்டையாம். முக்கலைப் பிரணவத்தை மாத்திரம் உச்சாரணம்பண்ணி அந்த மந்திரஉச்சாரண அந்தத் தில் தற்போதம் அற நிற்பதும் நிட்டையாம். திரு வருளை மாயாபீஜத்திலே உச்சரித்து அநேக கோடி சந்திரப்பிரபை ஒளியாக சிலபேர் தியானிப்பார்கள். பாசாங்குச அபய வரதமாய் இருக்கிற தேவியை சோம சூரியாக்கினிமண்டலத்திரய சொரூபமாக சிலபேர்

தியானிப்பார்கள். சிந்தாமணி பீஜத்திலே சிந்தாமணி ஒளிப்பிரபையாக சிலபேர் தியானிப்பார்கள். இப்படித் திருவருளை தியானிக்கவே சோமசூரியாக்கினி மண்டலத்திரய சத்திமண்டல மத்தியத்ததாய் இருக்கிற சிவபதங்களை அடையலாம்.

பஞ்சாட்சரங்களைப் பஞ்சாட்சர சொரூபமாய் இருக்கிற சிவனை இருதயகமலத்தில் சதாசிவ வடிவாகத் தியானம்பண்ணி 'ஓம் நமசிவாய' என்றும், 'ஓம் சிவாய நம' என்றும், 'ஔம் நமசிவாய' என்றும், 'ஔம் சிவாயநம' என்றும், நமசிவாய என்றும், சிவாயநம என்றும், சிவாயவாசி என்றும், சிவாய என்றும், யவாசி என்றும், சிவாய சிவசிவ என்றும், சிவ என்றும், வசி என்றும், சி என்றும் இப்படிப் பஞ்சாட்சரத்தைப் பன்னிரண்டுவிதமாகவுள்ளமையை ஆசாரியர் அறிந்து அந்தந்தப் பக்குவத்துக்குத் தக்கதாக அநுக்கிரகம் பண்ணியபடி அந்தந்தப் பஞ்சாட்சரங்களிலே செபம் பண்ணவும்; தியானம் பண்ணவும்; சமாதிபண்ணவும்; பரிபூரணத்தியானம் பண்ணவும்.

இப்படி வேதாகமங்களிலே தியானங்கள் அநேக விதமுண்டு. சாமானியர்களுக்கு அந்தத்துறை தெரியாது. ஞானசாரியர் அநுக்கிரகம் பெற்று அநுட்டிக்கும் அதிதீவிர பக்குவர்களுக்கே அது விளங்கும் என்க.

**ஞானத்தில் யோகம் முற்றும்**

# ஞானத்தில் ஞானம்

*மேல் ஞானத்திலே ஞானம் சொல்லுமிடத்துப் பரசமயிகள் கருத்து சிவப்பிரகாசத்தில் :—*

" அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நித்த முத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தியிவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலவுயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி இதுமுத்தித் திறத்த தாமே.

செய்யுள் — 82.

*உலகாயதன் மகளிரிடத்தில் சுகத்தை அனுபவிப்பதே முத்தி என்பன். புத்தன் உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்னும் ஐந்துகந்தமும் அறுவதே முத்தி என்பன். சாங்கியனும் வைசேடிகனும் மூன்று குணமும் அடங்குவதே முத்தி என்பன். அருகன் வினைந்த கன்மம் கெடுவதே முத்தி என்பன். பேதவாதியும் பாசுபதவாதியும் மலங்கள் போவதே முத்தி என்பன். கன்மயோகி சரீரம் நித்தியமாயிருக்கின்றதே முத்தி என்பன். மாயாவாதி சகலத்தையும் விவேகித்தறிவதே முத்தி என்பன். பாற்கரியன் உயிர்ப்போதம் கெடுவதே முத்தி என்பன். சித்தர்கள் அட்டமாசித்தியைப் பெறுவதே முத்திஎன்பர். நியாய—வைசேடிகன்—பிரபாகரன் முதலியோர் கல்லுப்போல் கிடப்பதே முத்தி என்பர். ஆகையால், இவர் கூறும் முத்திகள் அடா.*

இன்னம் பரசமயிகள் பாசத்தைச் சொல்லும் முறைமையில் மலங்கள் ஐந்தையும் இல்லை என்றும், ஆணவம் இல்லை என்றும், தத்துவங்களைப் பதினான்கு என்றும், இருபது என்றும், இருபத்து நான்கென்றும், இருபத்தேழு என்றும், முப்பது என்றும், முப்பத்தொன்று என்றும், முப்பத்து மூன்று என்றும், முப்பத்து நான்கு என்றும் கூறிப் பலவிதமாகப் பாசத்தில் இப்படி மயங்கியும்;

ஆன்மாவைச் சரீரத்தில் ஏகதேசி என்றும், எல்லாருக்கும் ஓர் ஆன்மா என்றும், உடம்பளவு நிறைவு என்றும், அறிவற்றதென்றும், அறிவுதானாய் இருக்கும் என்றும், ஒளியாய் இருக்கும் என்றும், அணுவாய் இருக்கும் என்றும், உருவமென்றும், அருவமென்றும், ரூபாரூபம் என்றும், சரீரத்தை நடத்தியிடும் என்றும், கருவிகளுக்கு நாயகமாம் என்றும், சுத்தம் என்றும், அசுத்தம் என்றும், சுத்தாசுத்தம் என்றும், மனம் என்றும், புத்தி என்றும், சித்தமென்றும், ஆங்காரமென்றும், பிரகிருதியென்றும், புருடனென்றும், மூலாதாரத்தில் என்றும், விந்து என்றும், நாதம் என்றும், சரீரம் நான் என்றும், பிரம்மமென்றும், பொறிகள் என்றும், குணம் என்றும் இப்படிப் பலப்பல விதமாகப் பசுத்தன்மையின் மயங்கியும்;

பதியை உருவென்றும், அருவென்றும், உருவருவென்றும், சிவதத்துவம் என்றும், சத்திதத்துவமென்றும், சதாசிவம் என்றும், மகேசுவரன் என்றும், உருத்திரன்என்றும், மால் பிரமன் என்றும், ஆன்மாவே சிவன்

என்றும் சிவன் என்றும் இரண்டாய் இருக்குமென்றும், ஒன்றாய்ப்போம் என்றும், இரண்டும் ஒன்றாய் இருக்கும் என்றும், சரீரம் என்றும், புருடன் என்றும், வேதம் என்றும், ஆன்மாக்கலந்திருக்கும் என்றும், சத்தெனத் தங்கியிருக்கும் என்றும், பூதங்கள் என்றும், பிரமம் என்றும் இப்படிப் பலப்பல விதமாகப் பகித்தன்மையிலே மயங்கியும் நிற்பார்கள். ஆகையால், இந்தப்பரசமயங்களில் சிறிது ஒத்தும் ஒவ்வாமலும் இருக்கின்றபடியினாலே சைவசித்தாந்த முறைமையால் மும்மலம் விட்டு நீங்கி ஆன்மா அருளைப்பெறுகின்ற முத்தியே நித்தியமான முத்தி. இந்த முத்தியைப் பெறுவதற்குச் சாம்பவ தீட்சை பண்ணவேணும். இதற்கு உதாரணம் :—

**ஞானச் சமயமே நாடும் தனைக்காண்டல்**
**ஞான விசேடமே நண்ணும் பரோதயம்**
**ஞானநிர் வாணமே நற்சிவோ கம்பாவம்**
**ஞானபி டேகமே நற்குரு பாதமே.**

—1476.

[ அச்சுப் புத்தகத்தில் இப்பாடம் சிறிது வேறுபட்டுளது ]

இந்தப்படி ஞானத்திற்குச் சமய, விசேட, நிருவாண, அபிடேகம் பண்ணிச் சைவ சித்தாந்த உண்மையுணர்ந்து வருமாறு :— ஆகையால், மலபந்தமாயிருந்த ஆன்மாவுக்குத் திருவருளே அந்தந்த அவதாரங்கள் தோறும் உடனாக இருந்து ஊட்டுவித்த உபாயமும், திருவருள் ஆர்ச்சித்த முறைமையும் சொல்லுதற்கு வருமாறு :— ஆன்மா இந்திரிய வியாத்தியிற் பொருந்தும் போது சீவன் என்றும், இருவினை நுகரில் பசு

என்றும், சகலாவத்தையிற் பொருந்தி உடலை யான் என்று அபிமானிக்கச் சகலான்மா என்றும், இவை அனைத்தும் நீங்கிக் கேவலப்படும் தன்மையில் கேவலான்மா என்றும், கேவலம் சகலம் இரண்டையும் நீங்கி மயக்கமற்ற இடத்தில் சுத்தன் என்றும், எல்லாம் தான் என்று வியாபித்த இடத்தில் வயிந்தவன் என்றும் தான் என்று அபிமானித்த அகந்தையும் நீங்கி அதீதப் பட்ட இடத்திலே திரோதான்மா என்றும், ஞானத்தை நேராகக்கண்டஅளவில் ஞானவான் என்றும், நிறைந்த ஞானத்தைப் பொருந்தில் அறிவன் என்றும், அங்ஙனம் நிறைந்த ஞானம் தானே பரிபூரணமாக நின்றதை அகம் புறம் என்னும் சுட்டகற்றி அந்த அருளே சொரூபமாய் நின்றபோது பராபரன் என்றும், அங்ஙனம் நின்ற எண்ணில்லாத சுகரூபதரிசனம் ஆம் போதில் சுகதரிசனன் என்றும், அங்ஙனம் நின்ற பரமானந்தத்தில் பொருந்தி அதுவே தானுமாய் நின்ற போது பரமானந்தி என்றும், அங்ஙனம் நின்ற நிலையில் கூடுதல் நீங்குதல் இன்றித் தாடலைபோல் நிற்பது சுபாவம் என்றும் ஆகும். ஆனந்தம்மேலிடில் சிவநாம மாக ஆன்மாவின் அவதாரப்போர் பதினாறும்.

மேல் அருளின் அவதாரப்போர் வருமாறு:—

ஆன்மாவானது கேவலத்திற் பொருந்தின் அருளின் நாமம் பிரகிருதியான்மா. சகலாவத்தையிற் பொருந்தின் அருளான்மா; சத்தியான்மா. சுத்தத்திற் பொருந்தில் அருட்சிவத்துவ ஆன்மா. ஆன்மா உடலை அறிந்து அருளைக்காணுமிடத்தில் அருள்

திரோதை ஆம். ஆன்மா அருளை அறிகிறபோது அருளறிவான்மா. ஆன்மா அருளுருவாகில் அருட் கருணையாம். ஆன்மா சிவனை அணுகில் ஞானானந்தமாம். இப்படியே திருவருளானது அந்தந்த அவதரங்கள் தோறும் உடங்கையாய் நீக்கமற நின்று உணர்த்துவது என்று அறிக. இந்தத் திருவருள் ஆன்மாவுக்கு சாலோகாதிபதம் அடைவிக்கும் வகை வருமாறு:—

ஆன்மா தத்துவாதீதனாய்த் தன்னைக்கண்ட இடம் சாலோகம். தன்னைக்கண்டு அருளைத் தரிசித்த இடம் சாமீபம். அருளும் ஆன்மாவும் இரண்டறக் கலந்த இடம் சாரூபம். அருள், சிவம், ஆன்மா மூன்றும் ஏகமாய் இரண்டற்று ஆனந்த வெள்ளத்து அழுந்துதல் சிவசாயுச்சியபதம். இந்த நிட்டையை மேற் செய்யுளில் விரித்துச் சொல்லச் சித்தாந்த நிலை நிற்பது வருமாறு:—

முன் சொன்ன மந்திராதிகாரமும், அர்ச்சனாதிகாரமும், யோகாதிகாரமும் உபாசனாமார்க்கத்தில் அநுட்டிக்கிறதினால் சரியை கிரியை யோகம் மூன்றும் கிரியையாச்சுது. இந்த உபாசனாமார்க்கத்தினால் ஞானம் வரவேணும். ஞானமாவது திரிபதார்த்த சொரூப சுபாவங்களை அறிவது. அவற்றுள்:—பதி இலக்கணம்.

பதியாவது: உருவம் அருவம் ரூபாரூபம் என்னும் மூன்றுமாய், அவை அல்லவுமாய், ஓர் அடையாளப் படாததாய், வாக்கு மனங்களுக்கு எட்டாததாய், ஓர் ஆதாரமும் இல்லாததாய், ஆதாரமாகிய பாசமுமாய், அதற்கு இதமுமாய், பரபோகமுமாய், போதானந்த

மாய், சிவமாய், சிவானந்தமாய், ஆனந்தாதீதமாய், அப்பாலாய், சர்வத்திர பரபூரணமாய், சச்சிதானந்த வடிவமாய் இருக்கும். மேற் பசு இலக்கணம்:—

பசுவாவது: சிந்திக்கறாய், அறியாதவறாய், இத அறிதங்களிலே சுக துக்கப்படுகிறவறாய்ச் சீவன் புருடன் புமான் என்னும் பெயரையுடையவறாய், கருவி கட்கு நாயகமாய், அந்தக்கரண சாட்சியாய், அறிவே வடிவாய் இருப்பதாம். மேற்பாச இலக்கணம்:—

பாசமாவது: ஆன்மாவை அநாதியிலே விட்டு நீங்காமல் செம்பிற்களிம்புபோலவும், இரத்தினத்தை அடக்கினசர்ப்பம்போலவும், கண்ணை மறைத்த படலம் போலவும், மறைத்து நிற்பதாய், பஞ்சமலங்களாய்த் தனு கரண புவனபோகங்களுமாய் இருக்கிறது பாச சொரூபம். ஆக இந்தத் திரிபதார்த்த சொரூபமும் அறிந்து பரகதி அடைவதற்குப் பரமேசுவரன் அருளிச் செய்த சிவாகமங்களில் உணர்த்தும் முறைமையில் முப்பது அவதரமாக அருளிச்செய்தது.

பஞ்சபூதப்பகுப்பு, பொறியறவுணர்தல், அந்தக் கரணசுத்தி, கேவலம், கேவலதரிசனம், கேவலாதீதம், ஆன்ம சொரூபம், ஆன்ம தரிசனம், ஞான தரிசனம், ஞானாதீதம், பரஞான தரிசனம், பரஞான யோகம், பரஞான போகம். சாக்கிராதீதம், சுத்தாவத்தை, சுகரூபம், சுகாதீதம், சிவப்பேறு, முன்சொன்ன ஆன்ம சுத்தி, பரமானந்த தரிசனம், பரமானந்த யோகம், பரமானந்த போகம், ஆன்மலாபம், பரமானந்த மோக்ஷம், உலகப்பகுப்பு ஆக அவதரம் முப்பதாம்.

இந்த முறைமையில் குருவருளினாலே அநுக்கிரகம் பெற்றுப்பராகதி அடையவேணும். இவை விரிவான படி. இதனாலே சுருக்கமாக இந்த முப்பது அவதாரத்தையும் தசகாரியமாகச் சொன்னது. அவையாவன:– தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி இவை மூன்றும் பூதப்பழிப்பு, பொறியறவுணர்தல். அந்தக் கரணசுத்தி, கலாதிஞானம், நிராகரணம், சுத்ததத்துவ தூடணம் இவை நான்கும் ஆன்மசொரூபம். கேவலம், கேவலதரிசனம். கேவலாதீதம், நின்றுண்மை இவை நான்கும் ஆன்மதரிசனம். சைதன்னிய தரிசனம், ஞான தரிசனம், ஞானாதீதம் இவை மூன்றும் ஆன்மசுத்தி. பரை தரிசனம் பரைஞானயோகம், பரைஞானபோகம், பரை ஞான மேலீடு இவை நான்கும் சிவரூபம். சாக்கிராதீதம், சுத்தாவத்தை, சுகரூபம், சுகாதீதம், சிவாபோறு இவை ஐந்தும் சிவதரிசனம். பரமானந்த தரிசனம், பரமானந்த யோகம், பரமானந்த போகம், பரமானந்த மேலீடு இவை நான்கும் சிவயோகம். உலகப்பழிப்பு, மறித்தக் காட்சி, சீவன் முத்தி இவை மூன்றும் சிவ போகம். ஆக இந்தப்படி முப்பது அவதாரமும் தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம். சிவயோகம், சிவபோகம் ஆகப் பத்துக்காரியமாகச் சொன்னது.

பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியும்நெறி, உயிரவை விளக்கம், இன்புறுநிலை, அஞ்செழுத்தருள்நிலை, அணைந் தோர்தன்மை ஆகப்பத்து. மெய்கண்ட சாத்திரம்

உண்மைநெறிவிளக்கத்தில் ஏழுவினவாகச்சொன்னது: தத்துவவிளக்கம், ஆணவதரிசனம், வினைப்பயன், ஆன்ம தரிசனம், அருள் தரிசனம், நடன தரிசனம், அஞ்செழுத்துண்மை ஆகவிவை ஏழு. இந்தப்படி உணர்த்தும் முறைமையில் விரிவும் குறைவுமாக இருக்கிறதினால் இந்நூலில் பன்னிரண்டு அவதாரமாகச் சொன்னது. அவை யாவை? எனில், பாசம், பாசாதீதம், போதம், போதானந்தம், அருள், அருளானந்தம், பரை, பரானந்தம், சிவம், சிவானந்தம், ஆனந்தாதீதம், அப்பால்நின்ற பேரொளி ஆக அவதாரம் பன்னிரண்டும் தரிசிக்க சிவசாயுச்சிய பதம் அடையலாம். தரிசனமுறை எப்படி? என்னில், விரித்துச் சொல்லில் உரைபெருகும். அவற்றை முதனூல்களில் கண்டுகொள்க. சுருங்கச் சொல்லுகிறதினால் அறிகிற அதிதீவிரதர பக்குவர்க்கு உணர்த்தும் முறைமை யாவது :—

**ஞானத்தில் ஞானம் முற்றும்.**

## பரை தரிசனம்

பிருதிவி முதல் நாதம் வரை தோற்றம், ஒடுக்கம், தொகை, வகை, தொழில், நிறம், குணம், தானம், அதிதேவதை என்னும் இந்த நவசம்பிரதாயமும் அறிவது பாசதரிசனம். இவை பாசம் என்று கண்டு கடந்த இடம் பாசாதீதம். இந்தப்பாசத்தை இது இது என்னக் கண்டறிந்து அப்பாசத்தைக் கடந்தது போதம்.

அந்தப்போதமும் ஒன்றினும் தாக்காமல் நிற்கிற அவதரத்தில் ஆனந்தம் உண்டாம். அதுபோதானந்தம். அந்தப்போதானந்தத்துக்குப் போதமாய் நின்று உணர்த்துவது அருள். அந்த அருள் நெறியில் தன்னொளி அடங்கியிருப்பது அருளானந்தம். அந்த அநுபவத்தில் நின்றால் அருளொளி மிகுந்த ஒளியாம். அதுவே பரைதரிசனம். அந்தப் பரையொளியில் தம் பரம் அற்று அமர்தல் பரானந்தம். அந்தப் பரானந்த ஒளிக்குள் ஒளியாக இருப்பது சிவம். பரையென்றும் சிவமென்றும் இன்றி இரண்டறக் கலந்து நின்றவிடம் சிவானந்தம். சர்வபூத நிரந்தரமாய், சுட்டற்ற பேரொளியாய், வாக்குமனாதீதமாய் நின்ற தன்மை ஆனந்தாதீதம். நவரத்தினஒளி, விளக்கொளி, மின்னொளி, சோம சூரியாக்கினி ஒளி என்று இங்ஙனம் சொல்லப்பட்ட ஒளிகளுக்கெல்லாம் உள்ளொளியாயும் அவைகளுக்கு அப்பாலாயும்; போதானந்தம், அருளானந்தம், பரானந்தம், சிவானந்தம் என்று சொல்லப்பட்ட ஆனந்தமே குணமாயும் இந்த ஆனந்தத்தைத் தரப்பட்ட சிவமே குணியாயும் இந்த குண குணிபாவங்களையும் கடந்து அப்பாலாயும்; ஆகாசாதீதம், பிரமாணாதீதம், தூரியாதீதம், வாசாதீதம், மனாதீதம், பாவாதீதம், ஷட்சூனியாதீதம், நிர்மலாதீதம், ஆனந்தாதீதம் என்று சொல்லப்படும் அதீதங்களைக் கடந்து அப்பாலாயும் இருக்கிற ஞான பொருளானபடியினாலே அதனை அப்பால் என்றதாம்.

ஆகையால், இந்தப் பன்னிரண்டு அவதரமும் சுருதி யுக்தி அநுபவங்களால் அநுபவித்தும் வரச் சிவம் சித்தமாகையினாலே இந்நூலிற் சொன்ன கிரமத்

திலே மந்திராதிகாரம் முதல் ஞானாதிகாரம் வரைக்கும் சற்குருவினிடத்திலே அநுக்கிரகம் பெற்றுக் கதியடையக்கடவர்.

**பரைதரிசனம் முற்றும்.**

# பூரண ஞானேதயம்

*திருமந்திரம், எட்டாந் தந்திரம், உடலஞ்சுபேதம் என்ற அதிகாரத்திலே :—*

**ஞானிக்குக் காயம் சிவமாகும் நாட்டிடில்**
**ஞானிக்குக் காயம் உடம்பே அதுவாகும்**
**மேனிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும்**
**மோனிக்குக் காயமும் பாழ்கெட்ட முத்தியே.**

*என்பது.* —2135

'ஞானிக்குக் காயம் உடம்பே அதுவாகும்' *என்றது:- சரியை, கிரியை என்று இரண்டு விதம். அவற்றில் சரியைக்குரியோர் மந்தபக்குவர். அவர்கள் விதிப்படி சௌச ஆசமனங்களை முடித்துப் புனலாடிச் சிவனுக்கும், சிவனடியார்களுக்கும் பணிவிடை செய்யச் சாலோகம் அடைவர்.*

*கிரியைக்குரியோர் மந்தரபக்குவர் ஆவர். அநுட்டானகர்மம் வரையில் முடித்துக்கொண்டு கன்ம சாதாக்கியம்—கர்த்ருசாதாக்கியம்—மூர்த்திசாதாக்கியம்*

அமூர்த்தி சதாக்கியம்–சிவசாதாக்கியம் என்னும் பஞ்ச சாதாக்கியங்களை அறிந்து, ஆசனம்–மூர்த்தி–மூலங்களை அறிந்து, இலய–போக–அதிகாரங்களை அறிந்து ஆகமங்களிலே சொன்ன விதிப்படி சிவனைப் பூசை செய்யச் சாமீபம் அடைவர்.

'மேல் நிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும்' என்றது:— யோகி தீவிர பக்குவர். யோகிகள் பஞ்ச கலாப் பிராசாதம், அட்டகலாப் பிராசாதம், தசகலாப் பிராசாதம், துவாதசகலாப் பிராசாதம், சதுர்த்தச கலாப் பிராசாதம், சோடசகலாப் பிராசாதம், பூதப் பிராசாதம், ஆரம்பப் பிராசாதம், மூர்த்திப் பிராசாதம், சிவப்பிராசாதம், ஆனந்தப் பிராசாதம், இப்படி வேதாகமங்களிலே சொல்லப்படாநின்ற மகத்தாயிருக்கிற பிராசாதங்களுடனேகூடி உச்சரிக்கிற பஞ்சாட்சரம் பன்னிரண்டுவிதம் உண்டு. அவை யாவை எனில்? தூலத்தில் தூலம், தூலத்தில் சூக்குமம், தூலத்தில் அதிசூக்குமம்; சூக்குமத்தில் தூலம், சூக்குமத்தில் சூக்குமம், சூக்குமத்தில் அதிசூக்குமம்; அதிசூக்குமத்தில் தூலம், அதிசூக்குமத்தில் சூக்குமம், அதிசூக்குமத்தில் அதிசூக்குமம் ஆக—9. பிரமபஞ்சாட்சரம், கலாபஞ்சாட்சரம், திரிவன்ன பஞ்சாட்சரம் ஆக—3. ஆகப்பஞ்சாட்சரம் பன்னிரண்டு விதம் உண்டு, அந்தப் பிராசாதத்துக்குச் சேர்ந்த பஞ்சாட்சரங்களைக் கூட்டி இரேசகம்பண்ண அப்போது விந்துவாகிய சத்தியினிடத்தில் நின்று அமுதம் சொரியாநிற்கும். அந்த அமுதத்தினாலே உள்ளும் புறம்பும் ஸ்நானம்பண்ணி அப்பால் இரேசக பூரக கும்பகங்கள் பண்ணியும், தனி

இரேசக பூரக கும்பகங்கள் பண்ணியும், இரேசகமும் கும்பகமும் பண்ணியும், தனி இரேசகம்பண்ணியும், தனிப்பூரகம் பண்ணியும், தனிக்கும்பகம் பண்ணியும், இரேசக பூரக கும்பகம் ஒன்றும் இல்லாமலும் தியான சமாதி கைவந்ததற்குத் தக்கதாய்ப் பண்ணிக்கொண்டு சமாதி நிட்டையிலே பொருந்தியிருக்கச் சாரூபம் பெறலாம்.

'ஞானிக்குக்காயம் சிவமாகும் நாட்டிடில்' என்றது:—ஞானி அதிதீவிரதரபக்குவர். தத்துவாதீதரய்த் திருவருளாலே தன்னைத் தரிசித்து அந்தத் திருவருளே தனுவாகச் சிவத்திலே தற்போத மறலாம். இந்த ஆனந்த வெள்ளத்து அமிழ்தலே சாயுச்சியமாம்.

'மோனிக்குக் காயம் முப்பாழ்கெட்ட முத்தியே' என்றது:— மோனி அதிதீவிர பக்குவர். அவருக்குக் கர்மம் ஒன்றும் செய்யவேண்டுவதில்லை. சீவப்பாழ், பரப்பாழ், சிவப்பாழ் என்ற முப்பாழுங்கடந்து, திரிவித கரணங்களும் மௌனமாய். தம்பாகாரமாகி, பெறுவாறும்பேறும் அற்று, அவனேதானாகி, இரண்டற்று, கச்சியற்று, கலப்பில்லாதே அநந்நியமாய், பழுதில்லாத முத்தியைப் பெறுவார் என்றவாறு. மோனிக்கு சர்வ பாவமும் நசித்துப் போம். இதற்கு உதாரணம் :—

> **கொலையே களவுகட் காமம்பொய் சால**
> **மலைவான பாதக மாமிவை ஐந்தும்**
> **தலையாஞ் சிவனடி சார்ந்தின்பம் சார்ந்தோர்க்**
> **கிலையா மிவைஞான னந்தத் திருக்கவே.** —200.

என்க.

ஆகையினாலே பிராசாத மந்திரத்துக்குமேல் மந்திரமில்லை, சிவனுக்கு மேலாகத் தெய்வமுமில்லை, சிவஞானியைப்பார்க்க உயர்ந்தோரில்லை, சிவசமயத்தைப் பார்க்கச் சமயமுமில்லை. சர்வான்மாக்களுக்கும் அறியாமையே காயம். மகாத்மாக்களுக்கு அறிவே காயம். இந்த அறிவு வந்தால் அறியாமைபோம். அறியாமை கெட்டுப்போகில் சனனமரணமில்லை. இந்த அறியாமை போய் அறிவு வரும்படிக்குச் சிவசமயத்தில் நின்று கதியடையும்படிக்குத் திருமூலர், சிவவாக்கியர் முதலியோர் வேதாகமங்களில் அருளிச்செய்த பிராசாத பஞ்சாட்சரவித்தையும், சிவசத்தி தியானங்களும் அந்தந்த நிட்டாபரர்களுக்கு ஆகமங்களிலே சொன்னபடி உணர்த்துதல் வருமாறு :—

சிவத்தியானம்: உதயத்துக்கு ஐந்து நாழிகை யென்னப் பிராம்மீ எனப்படும்; அப்பொழுது எழுந்திருந்து சரியையாளர் உருத்திரமூர்த்தியை தியானிக்க. கிரியையாளர் சதாசிவ மூர்த்தியை தியானிக்க. யோகிகளாவார் நாதவிந்துக்களைத் தியானிக்க. அறிவுமிகுந்த ஞானிகள் சிவோகம் பாவனை பண்ணுக.

இப்படிச் சரியை யாதி நான்கு பேரும் பிராதக் காலத்தில் கர்மங்களைப் பண்ணி நித்திய அநுட்டான கர்மங்களை முடிக்க. இவற்றில், உருத்திர மூர்த்தியை இருதய கமலத்திலே சிவந்த திருமேனியும், அபய வரதமும், மானும் மழுவும், சர்ப்பாபரணமும், புலித் தோலுடையும், சடாமகுடமும், சந்திர சேகரமும், திரிநேத்திரமும், கருணைபொழி திருமுகமும், காள

கண்டமும், திருமார்பினில் பூப்புரி நூலும், விபூதியுத் தூளனமும், உபய பாத பத்மத்திலே ஒலிதரு சிலம்பும், வாமபாகத்தில் பச்சை நிறம் போன்ற உருத்திர சத்தியுமாய்த் தியானித்துச் செபம் பண்ணுக. மந்திரம் திரோதம் முதல் உச்சரிக்கப் புத்தியுண்டாம். சிவம் முதலாக உச்சரிக்க முத்தியுண்டாம். இதற்கு உதாரணம் தத்துவரத்ஞாகரத்தில் :

"தாந்தாதி ஐந்தி ஞேடே பாந்தாதி ஐந்தும் கூட்டச்
சேர்ந்தாயவாறேசெப்பத்திகழ்தூல சூட்சம் தன்னில்
வாய்ந்தாய பஞ்ச வன்னம் வகைவகை யுச்ச ரிக்கச்
சேர்ந்தாய புத்தி முத்தி சேர்வது திண்ண மாமே."

எனவும். திருமந்திரத்தில் :—

" பத்தெட் டிருக்கும் பகர்ந்தபஞ் சாட்சரம்
ஒத்திட் டிருக்கும் உபாயம் உணர்த்தக்கேள்
உத்தமம் எட்டோ டொருபத்து மெனமூன்று
சுத்தம் பதினுலும் சொல்லப் பதினென்றே."

எனவும், வருவது கண்டு கொள்க.

பூரண ஞானோதயம் முற்றும்.

---

# சிவத்தியானம்

---

மேல் சதாசிவ மூர்த்தியை தியானம் பண்ணும்படி :—

புருவ மத்தியிலே சுத்தப் படிகம் போன்ற திரு மேனியும், ஐந்து சிரசும், பதினைந்து நேத்திரங்களும், சந்திரமவுலியும், பத்துச் சிரிய கரங்களில்: வலப்பால்—

சூலம், வச்சிரம், கட்கம், பரசு, அபயங்களும்; இடப்பால் – நாகம், பாசம், மணி, பிரளய காலாக்கினி, அங்குசங்களுமாகப் பதுமாசனத்தராய், பார்வதி பாகராய், சர்வாபரண பூஷணாலங் கிருதராய்த் தியானித்து நமஸ்கரித்துச் செபிக்க. மந்திரம் சிவம் முதலாக உச்சரிக்க. இதற்கு உதாரணம்:—

எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை உன்னி உருகும் மனத்தராய்த்
தெளிய ஓதிச் சிவாய நமவெனும்
குளிகை இட்டுப்பொன் ஆக்குவன் கூட்டையே.

எனவும், —2709

சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அபாயம் அறவே அடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ என்றென்றே சிந்தை
அபாயம் கெடநிற்க ஆனந்தம் ஆமே.

—2718.

எனவும் வருவதுகண்டு கொள்க.

மேல் யோகிகள் நாதவிந்துக்களைத் தியானம் பண்ணும்படி :— சதாசிவத்துக்குமேல் சத்தியும் சிவமும். விந்துவுக்குச் சத்தியென்று பேர். ஆகையால், விந்துவாகிய சத்தி சொரூபம் அநேககோடி சந்திரப் பிரபை ஒளியாக இருக்கும். அது உத்கிருஷ்டமாகச் செபிக்கப்படும். விட்டு விளங்காமல் நிற்பது நாதம். இந்த சொரூபத்தைத் தியானித்து செபம் பண்ண மந்திரம் அருள்சிவம் இரண்டும் உச்சரிக்க. இதற்கு உதாரணம் :—

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

—2716

*என்பது கண்டு கொள்க.*

*மேல் ஞானிகள் சிவோகம் பாவனை பண்ணும்படி:— சிவோகம் பாவனை குருசம்பிரதாயக்கிரமத்திலே கேட்டுக்கொண்டு செபிக்க. இதற்கு உதாரணம் :—*

அங்கமும் ஆகம வேதமும் ஓதினும்
எங்கள் பிரான்எழுத் தொன்றில் இருப்பது
சங்கைகெட்டவ்வெழுத்தொன்றையும்சாதித்தால்
அங்கனல் கண்ட அருங்கல மாமே.

—2720.

பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் விளைவறி வாரில்லை
எழுத்தறி வோமென் றுரைப்பார்கள் ஏதர்
எழுத்தை அழுத்தும் எழுத்தறி யாரே.

—2721.

*என்பது கண்டு கொள்க. இன்னும்:—*

"குன்று முதலெழுத்துக் கூட்டியுட னொன்றாயும்
ஒன்றாக வுற்றெழுத்து.........நின்றும்
தெரிய விலக்கெழுத்துத் [ தீர்ச்சிதக்காய்ப் ]
பிரியா வெழுத்தென்று பேசு." ?

"மெய்யெழுத்து மேலாக மேவியதி லொன்றாக
உய்யவிரண் டாக வுயிரெழுத்துப்—பொய்யைமறைத்
திரு மெழுத்துடனே ஏய்தற் குருக்கமாம்
பேருலே இன்பம் பெறும்." ?

"ஓரெழுத்தால் நாலெழுத்தும்ஒன் றிரண்டில் தோயாது
பேரெழுத்தாய் நின்று பெருகின்பம்—பார் நிறுத்த
நாதாதி யுள்ளடங்கி நள்ளொடுகீழ் மேலிட்டு
வேதாதி யந்தமுமாம் வேறு." ?

"சவ்வினுட லந்தியத்திற் றுங்குகின்ற யவ்வதனை
இவ்வெழுத்துமேல்விசா ரித்துறையும்-அவ்வெழுத்தே
பாங்கான சியெழுத்தாம் பாசம் பசுபதியென்
றுங்காயு மீங்காயு மாங்கு." ?

*என்பது கண்டு கொள்க.*

குறிப்பு :—

*[மேலே கண்ட வெண்பாக்களின் சரியான உருவம் கிடையாமையின் ஏட்டிலுள்ளபடியே அச்சிடப்பட்டன. நல்ல பாடம் கிடைத்தால் அடுத்த பதிப்பில் திருத்தம் பெறும். சைவ மெய்யறிஞர்கள் இவ் வெண்பாக்கள் கிடைக்கப் பெறுவாராயின் அவற்றை எளியேனுக்கு அனுப்பித் திருத்துவார்களெனவும் வேண்டுகிறேன்.]*

*இந்த வெண்பாக்கள் நாலுக்கும் உதாரணம் :—*

ஊமை எழுத்தொடு பேசும் எழுத்துறில்
ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிடும்
ஓமய முற்றது உள்ளொளி பெற்றது
நாமய மற்றது நாமறி யோமே.

—2158.

எனவும்,

ஆறெட் டெழுத்தின்மேல் ஆறும் பதினாலும்
ஏறிட் டதன்மேலே விந்துவும் நாதமும்
சீறிட்டு நின்று சிவாய நமவென்னக்
கூறிட்டு மும்மலம் கூப்பிட்டுப் போமே.

எனவும், —930.

" ஆதியெட் டான வன்னமீ ராறு மூப்பீ ரேழோ
டோதிய விந்து நாத முடன்சிவா யநம வுள்ளிட்
டேதம தறவே யோத விதுமூல மனுவி னாலே
தீதற வுரைத்த பஞ்சாட் சரமயஞ் செப்புங் காலே."

எனவும், ?

" சிவாய வஞ்செ ழுத்துளே தெளிந்து தேவ ராக லாம், சிவாய வஞ்செ ழுத்துளே தெளிந்து வான மாளலாம், சிவாய வஞ்செ ழுத்துளே தேடு வார்க ளின்பொருள், சிவாய வஞ்செ ழுத்துமே ஞானி கள்தி யானமே. "

எனவும் வருவன கண்டு கொள்க. ?

மேல் ஞானிகள் தோத்திரம்:—

திருச்சிற்றம்பலம்

" என்னு ளூறிய வின்னமு தொன்றுண்டு
என்னு ளூறி எனக்கே களிதரும்
உன்னி லுன்னும் உளுவிடில் விட்டிடும்
என்னுள் ஈசன் இருந்த திறமிதே. "

—தேவாரம் ?

" வெள்ளெ ருக்கர வம்விர வும்சடைப்
புள்ளி ருக்குவே ளூரரன் பொற்கழல்
உள்ளி ருக்கும் உணர்ச்சியில் லாதவர்
நள்ளி ருப்பர் நரகக் குழியிலே. "

—திருக்குறுந்தொகை.

" நாடி நாரணன் நான்முகன் என்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை அம்பலத்
தாடி பாதமென் னெஞ்சு ளிருக்கவே. "

*கோயில் : திருக்குறுந்தொகை—10.*

*திருச்சிற்றம்பலம்*

*இப்படிச் சிவனைத் தன் இதயத்திலே வைத்துத் தியானித்துச் சிவதோத்திரம் பண்ணுவார்.*

**சிவத்தியானம் முற்றும்**

# திருவருளைத் தரிசிக்கும் முறை

*மேல் திருவருளைத் தரிசிக்கும் முறை வருமாறு:— சந்தியாகாலங்களில் சிவசக்திகளைத் தியானிக்கும்படி. உதயகாலம், மத்தியான்னகாலம், சாயங்காலம், அர்த்த ராத்திரி காலங்களிலே ஸ்நானம் பண்ணி சமய விசேட தீட்சையுடையோர் காலையிலே இருதய கமலத்திலே பிரமசக்தியைச் சிவந்தமேனியும், சிவந்த ஆபரணமும், சிவந்த ஆடையும் தரித்தவராய்க் குடமும், யக்ஞோப வீதமும், சதுர்முகமும், சதுர்ப்புயமும், வலதுகையில் செபமாலையும் சிருக்கும், இடதுகையில் தண்டும் கமண்டலமும் உடையவராய் எட்டு நேத்திரங்களோடும் அன்னவாகனத்தில் பதுமாசனியாகவும் வாலையாகவும் தியானிக்கவும்.*

*குணத்திரயங்களோடே கூடியிருக்கிறவளாகத் தியானிக்கவும். துரியையாய் இருக்கிற சத்தியை அரூபையாகவும் அல்லது நீலநிறமாக வேனும், குணாதீதையாகவும் துவாதசாந்தத்திலே தியானிக்கவும்.*

*இப்படிச் சிவசத்திகளைத் தியானித்து அந்தந்தச் சத்திமண்டலமத்தியராய்ச் சிவனைத்தியானித்துச் சிவோகம் பாவனைபண்ணி நித்தியாநுட்டான கர்மம் முதலியவெல்லாம் முடித்துவரப் பரமபதம் அடைவர்.*

**சத்திதியானம் முற்றும்**

---

# ஞானதீட்சை

---

சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவறு யற்றோர்
சேர்ந்தஎண் யோகத்தர் சித்தர் சமாதியோர்
ஆய்ந்த கிரியையோர் அருச்சனை தப்பாதோர்
நேர்ந்த சரியையோர் நீள்நிலத் தோரே.

—1447.

*என்பது கண்டுகொள்க. ஞானத்தில் சமய, விசேட, நிருவாண ஞான தீட்சை வருமாறு :—*

**ஞானத்தில் சமயம்**

ஞானச் சமயமே நாடும் தனைக்காண்டல்
ஞான விசேடமே நண்ணும் பரோதயம்
ஞானநிர் வாணமே நற்சிவோ கம்பாவம்
ஞானபி டேகமே நற்குரு பாதமே.

—1476.

*இதனை உணர்த்தும் முறைமை வருமாறு:— 'ஞானச் சமயமே நாடும் தனைக்காண்டல்' என்பது—*

தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை அறியாமல் தான்கெடு கின்றனன்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே.
—2355.

அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றறிவித்தான் என்நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தும்
அறிவு வடிவென் றறிந்து மிலேனே,
—2357.

அறிவுக் கழிவில்லை ஆக்கமும் இல்லை
அறிவுக் கறிவல்லால் ஆதார மில்லை
அறிவே அறிவை அறிகின்ற தென்றிட்
டறைகின்ற நான்மறை ஈறுகள் தாமே.
—2358.

என்னை அறிந்திலேன் இத்தனை காலமும்
என்னை அறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
என்னை அறிந்திட் டிருத்தலும் கைவிடா
தென்னையிட் டென்னை உசாவுகின் றேனே.
—2366.

முன்னை அறிவினிற் செய்த முதுதவம்
பின்னை அறிவினிற் பெற்றால் அறியலாம்
தன்னை அறிவ தறிவாமஃ தன்றிப்
பின்னை அறிவது பேயறி வாமே.
—2318.

ஞானத்தில் சமயம் முற்றும்

‘ஞான விசேடமே நன்றாம் பிராசாயம்’ என்றது சிவயோகம்.

“ஓங்கிய வாயுவை யுள்ளே அமைத்துள் ஒளி விளக்காய், நீங்கிய பாசத்தை நின்மல மாக்கி நிலா வெளிக்கே. தேங்கிய ஆனந்தத் தேனூற லுண்டு சிதம்பரத்தே. தூங்கி யிராய்மன மேபஞ்ச பூதத் துவக்கறவே.”
எனவும்,

“ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின் மேல், அளியில் விளைந்ததோர் ஆனந்தந் தன்னை அநாதியிலே, வெளியில் விளைந்த வெறும்பாழை வெட்ட வெறுந்தனியைத், தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே.”
எனவும்,

“ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மானந்தத்தே, தேங்கார் நினைப்பும் மறப்பு மறார்தினைப் போதளவும், ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருகன் உருவங் கண்டு. தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வாரெம தூதருக்கே.”
எனவும்,

“போக்கும் வரவும் இரவும் பகலும் புறமுமுள்ளும், வாக்கும் வடிவு முடிவுமில் லாதொன்று வந்து வந்து, தாக்கு மனோலயம் தானே தருமென்னைத் தன் வசத்தே, ஆக்கும் அறுமுக வாசொல்ல வொண்ணாதிந்த ஆனந்தமே.”
எனவும்,

"ஓமெ னும்மெ ழுத்தினை ஒடுக்கி மேல்வ லித்தி டில், சோமன் அங்கி சூரியன் தொடர்ந்த கம்பு குந் திடும், வாம னுக்கு வீடதாய் வகுத்து ரைத்த மந் திரம், ஏமமுற் றிருப்பர் கண்டீர் ஈசன் ஆணை ஈசனே."

*எனவும்,*

"மாசிலாப் பரமா னந்த மாமுனி மொழிந்த ஞான, வா சி யா ம் பொருளை நோக்கி வளிபட நடந்து சென்றே, ஈசனோ டுறைந்த போதில் இனியபே ரின் பம் பெற்றே, ஓசையாய் உலகில் வாழ்வோர் உரிய சந் தானத் தாரே"

*எனவும் வருவது கண்டுகொள்க.*

## அட்டாங்கயோகம்

*மேல் அட்டாங்க யோகம்:—*

"உந்தியிற் கீழ்க்குண் டலிநாடி யூடுசென் றூற வும்பர், சிந்தையிற் றமரைப் போதொளிக் கேதனைத் தேறியப்பால், சந்திரா தித்தர் மண்டல நாப்பணிற் சங்கரியைப், புந்தி யுறத்தொழ அட்டாங்க யோகம் பொருந்திடுமே."

*எனவும்,*

## அட்டமாசித்தி

"நகார மாதி யைந்து நல்சி கார மாதி யைந்துளே, பகாவி டாவ கார மாதி யைந்தை யும்ப டர்ச்சியால், உகாத ஓவ்வொ டோது நாதம் யோக மூடு றப்பெறு, விகாதி கூடி லெட்ட தான சித்தி முற்று மெய்துமே."

*எனவும்,*

## சமாதி

புறத்துளா காசம் புவனம் உலகம்
அகத்துளா காசமெம் ஆதி அறிவு
சிவத்துளா காசம் செழுஞ்சுடர்ச் சோதி
சகத்துளா காசம் தானம் சமாதியே

—2812.

## நிட்டை

"மாயநட் போரையும் மாயா மலமெனும் மாதரையும், வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாம், தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந், தேயும தேநிட்டை யென்று ளெழிற்கச்சி யேகம்பனே."

—*திருவேகம்பமாலை* 10

பரோதயம் முற்றும்.

---

*'ஞானநிர் வாணமே நற்சிவோ கம்பாவம்' என்பது:— திரிபதார்த்த சொரூபம் அறிதல்.*

"என்னை அறிவென்றான் என்னறிவில் ஆனந்தம்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும்–முன்னையெனைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம்."

*எனவும்,*

"அறிவுக் கறிவென்னும் ஆகமங்கள் சுத்த
அறிவென்னும் வேதத்தின் அந்தம்—பிறிதில்
நிலைக்கிற் சமமாகும் நீயென்றால் நானென்
றலைக்கும் பிரமா தியை."

*எனவும்,*

அறிவறி வென்ற அறிவும் அநாதி
அறிவுக் கறிவாம் பதியும் அநாதி
அறிவினைக் கட்டிய பாசம் அநாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே.

*எனவும்,* —2405

"முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅநு போகத்தைத் துய்த்தல்அணு – மெத்தவே
இன்பம் கொடுத்தலிறை இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொளப் பா."

—*உண்மை விளக்கம்* 50.

*எனவும் வருவது கண்டுகொள்க.*

நிருவாணம் முற்றும்.

*'ஞானபி டேகமே நற்குரு பாதமே' என்பது:—*

"காலும் மனமும் கலந்தளவில் தண்ணீரும்
பாலுமென ஏகிப் பவிக்குமோ—மேலுமெனை
ஆளும் அருணகிரி ஐயரே உம்முடைய
தாளுமடி யேன்மனமும் தான்."

"பார்த்திருக்கும் அந்தப் பரிபூ ரணவொளியில்
சேர்த்திருக்கும் செம்மை தெரியாது – சாத்திரத்தின்
சொல்லெல்லா மெல்லச் சுகமாய் எனக்களித்த
எல்லையார் காண்பார் இனி."

"கற்பனைகள் எல்லாம் கடந்தொன்றும் காரணனை
கற்பனையி லேசுட்டிக்கா றேதே–கற்பனைகள்
எல்லாம் இறந்த இடத்தே யுனையிருததி
நில்லாய் அதுவே நிலை."

*எனவருவன கண்டு கொள்க.*

ஞானம் முற்றும்.

## மௌன நிட்டை

*மேல் மௌன நிட்டை:—*

வாக்கும் மனமும் இரண்டு மவுனமாம்
வாக்கு மவுனத்து வந்தாலும் மூங்கையாம்
வாக்கும் மனமும் மவுனமாம் சுத்தரே
ஆக்குமச் சுத்தத்தை ஆரறி வார்களே.

*என்பது கண்டுகொள்க* —1896

*இப்படி ஞான மௌன நிட்டை வந்து சர்வசங்க பரித்தியாகம் பண்ணி அவதூதாச்சிரமமாய் இருக்கிற பேர் அநுட்டிக்கும் முறைமை வருமாறு:—*

"பூதா காசம் மற்றுள நாலிற் புணர்வாகிப்
பேதா காச மாகிப் பிரியா நிறைபோலப்
போதா காச மாகிப் பொருளாய் நிறைவாகும்
நாதா தீதப் பரசிவ மாவதும் நாமென்றார்."

"சடசித் தெங்கணும் நாமே நாமே சகலமுமென்
றுடலிற் கண்டவன் அவனே சிவனும் ஒருவர்க்கும்
தொடரத் தெரியா ஆகம முடிவும் சொல்லுமரோ
அடரப் பிரமனும் அரியும் விபுதரும் அறிவீரால்.

*—விருத்தாசல புராணம்: தீர்த்தச் சருக்கம்* 16-17

*என்பது கண்டுகொள்க.*

*இன்னம் பெரிய புராணத்தில்:—*

"உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி உருவின்கண், அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை எனப்போற்றி, இணையில் வண்பெருங் கருணையே ஏத்திமுன் எடுத்தசொற் பதிகத்தில், புணரும் இன்னிசை பாடினர் ஆடினர் பொழிந்தனர் விழிமாரி."

*—திருஞானசம்பந்தர்புராணம்—161.*

*இதற்கு உதாரணம் தேவாரம்:—*

"மண்ணுண்ட மாலவனும் மலர்மிசை மன்னினனும், விண்ணுண்ட திருவுருவம் விரும்பினார் காண மாட்டார், திண்ணுண்ட திருவே மிக்க தில்லைச்சிற் றம்பலத்தே, பண்ணுண்ட பாடலோடும் பரமனை ஆடுமாறே."

*—திருநாவு—திருநேரிசை—10.*

*அதிவர்ணாசிரமிகள் நிற்கும் சமயமாவது சுத்த சைவம். அதெப்படி? என்னில்,—*

சைவம் சிவனுடன் சம்பந்த மாகுதல்
சைவம் தனையறிந் தேசிவன் பாற்சார்தல்
சைவம் பசுபாசம் சாராமல் நீங்குதல்
சைவம் சிவானந்தம் சாயுச்சிய மாமே.

*மன்னுது.* —1512

### வேடம்

"முன்பெ லாம்முழு நீறணிந் தென்பயன்
பின்பெ லாம்சடை தாழவிட் டென்பயன்
தென்ப ராய்த்துறை மேவிய செல்வனார்
அன்ப ராய்இருப் பாரை அறிவரே."

*—திருப்பராய்த்துறை: திருக்குறுந்தொகை.*

*குறிப்பு: முன் இரண்டடிகள் வேறு பாடமாக இதில் உள்ளது காண்க.*

6

### தீர்த்தம்

"சாதத்தின் வேராய்த் தமோமயமாம் மூலமலம்
பூதப் புனலாடப் போமேதான்—போதத்தே
ஆனந்த வெள்ளத்தே ஆனசிதா காசத்தே
தானறநின் றுலதேதீர்த் தம்" ?

எனவும்,

சிவவாக்கியம்:

"காலை மாலை நீரிலே முழுகு கின்ற மூடர்காள்
ஊழி காலம் நீரிலே யூறு தேரைக் கென்பலன்
காலமே எழுந்தி ருந்து கண்கள் மூன்றும் ஒன்றதாய்
மூலமே செபிப்பி ராகில் முத்தி வித்தை சித்தியே."

### அநுட்டானம்

"நீரையள்ளி நீரையுன்னி நீர்நினைந்த காரியம்
ஆரையுன்னி நீரெல்லாம் அவத்திலே இறைக்கிறீர்
வேரையுன்னி வித்தையுன்னி வித்திலே முளைத்தெழும்
சீரையுன்ன வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம்."

—சிவவாக்கியர்.

"பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்கள் எத்தனை
பாழிலே செபித்துவிட்ட மந்திரங்கள் எத்தனை
மிண்டராய்த் திரிந்தபோ திறைத்தநீர்கள் எத்தனை
மீளவும் சிவாலயங்கள் சுற்றிவந்த தெத்தனை
அண்டர்கோ னிருப்பிடம் அறிந்துணர்ந்த ஞானிகள்
கண்டகோயில்தெய்வமென் றுகையெடுப்பதில்லையே.

—சிவவாக்கியர்.

### அநுட்டான பலன்

"புனிதமிகு பலகோடி தீர்த்தபல னடையும்
பூதானம் விப்பிரர்க்குக் கொடுத்தபல னடையும்
தினமதனிற் பிதிர்க்கணங்கள் இருடிமனு டருக்குத்
திருந்தியதர்ப் பணம்கோடி செய்தபல னடையும்

மனதுதனில் உறும்சகத்திர கோடிமகா மந்திரம்
மருவியொருதனித்திடத்தில்வழுத்துபலன்அடையும்
தனிமுதலா கியஞான ஒளிவெளியில் நின்ற
தற்சொருபப் பிரமந் தனையறியிற் றனே." ?

## தோத்திரம்

"இருக்கு நாலு வேதமும் எழுத்தையற வோதினும்
பெருக்க நீறு பூசினும் பிதற்றி னும்பி ரானிரான்
உருக்கு நெஞ்சை உட்கலந்து உண்மைகூற வல்லிரேல்
சுருக்க மற்ற சோதியைத் தொடர்ந்து கூட லாகுமே."
—சிவவாக்கியர்.

"பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவு பகனேர மின்றிக்- குரல்நெரியக்
கூப்பிட்டும் காணுமோ கோழைமட நெஞ்சேமால்
பூப்பிட்டும் காணுப் பொருள்."

## சிவபூசை

"எங்கும் சிவாலயமாம் எங்கும் சிவானந்தம்
எங்கும் சிவனடிமை எங்குமாம் — பங்கமற
நிற்றல் சிவபூசை நின்றநிறை விற்குறையாப்
பற்றொழிதல் பூசா பலம்."

"காணுதே தீண்டாதே காணுதே உட்புறம்பும்
பேணுதே மந்திரங்கள் பேசாதே—தாணுவை நீ
ஆக்காதே ஆனந்தம் ஆக்காதே ஆகாமை
தாக்காதே வாழ்வதுபூ சை."

"எங்கும் சிவமொழிய இல்லையவன் தன்னுணே
அங்கத் திருட்கருவி ஆணவமாம் — பொங்குமிருள்
மைசெய்த மாமாயை மாயவினை மற்றுமெல்லாம்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய்."
—சிவானந்தமாலை.

"உரையிறந்தார் உண்ணும் உறவிறந்தார் மாயத்
திரையிறந்தார் காண்கின்ற தேவை — வரைபெருக
வாசிப் பதும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப் பதும்சுத்தப் பொய்." ?

## யோக சமாதி நிட்டை.

*இனி, மேல் யோக சமாதி நிட்டையாவது:—*

"சுட்டறிவு கெட்ட சுகாதீத உண்மையிலே
விட்டகலா தென்றும் விரவுவோர் — இட்டமுடன்
யோக சமாதிகளாம் உட்புறம்பாம் பூசைகளும்
ஆக நினையார் அவர்." ?

## ஆனந்தம்

ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலார்
ஆனந்தம் ஆவதை ஆரும் அறிந்திலர்
ஆனந்தம் ஆவதை ஆரும் அறிந்தபின்
ஆனந்தம் அற்றிடம் ஆனந்தம் ஆமே.

—2796

"ஓங்கு சிவானந்தம் ஓங்குமருள் ஆனந்தம்
ஓங்குமுயிர் ஆனந்தம் ஒவ்வாமல் — ஓங்கும்
மறைப்பும்ஆ னந்தம் மலமும்ஆ னந்தம்
உறப்பெருகி எங்குமா கும்." ?

ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வம்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ரானது
நன்றுகண் டீர்நல் நமச்சிவா யப்பழம்
தின்றுகண் டாற்குத் தித்தித்த வாறே.

—2962

## ஞானி வினா

"உதிக்குகின்ற தெவ்விடம் ஓங்குகின்ற தெவ்விடம்
கதித்தசீவன் எவ்விடம் கனவுறக்கம் எவ்விடம்
மதித்த ஞானம் எவ்விடம் மதிமயக்கம் எவ்விடம்
விதிக்கவல்ல ஞானிகள் விரித்துரைக்க வேணுமே."

"உருத்தரிக்கு முன்னெலாம் உயிர்கள்நின்ற தெவ்விடம்
திருக்கறுத்துக் கொண்டுநீ சிவாயவென்று செப்புமே."

"ஓதிவைத்த நூல்களும் உணர்ந்துகற்ற கல்வியும்
மாதர்மக்கள் சுற்றமு மாகவந்த நித்திரை
ஏதுபுக் கொளித்ததும் எங்குமாகி நின்றதும்
சோதிபுக்கொ ளித்ததும் சொல்லடாசு வாமியே."

"உதிக்குகின்ற தவ்விடம் ஓங்குகின்ற தவ்விடம்
கதித்த சீவன் அவ்விடம் கனவுறக்கம் அவ்விடம்
மதித்தஞானம் அவ்விடம் மதிமயக்கம் அவ்விடம்
விதிக்கவல்ல ஞானிகள் விரித்துரைக்கும் வாறதே.

"சுத்தி ஐந்து கூடமொன்று சொல்லிறந்த தூயொளி
சத்தியும் சிவமுமாய்த் தரித்துநின்ற தோர்கிலீர்
சத்தியாவ தும்முடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்கா ளிதற்குமேல் பித்ததாவ தில்லையே."

## ஞானிகள் தன்மை

"ஆராலும் என்னை அமட்டவொண் ணாதினிச்
சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யாங்கெதிர்வ தல்லா லியார்பாடும்
சாரா வறிவறிந்தேன் தான்." ?

அன்பும் உருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன் கடிப்பன் திருத்துவன் தானே.
—2980

## ஞானிகள் பெருமை

நாதன் அடியார் நயந்தொன்றை நாட்டிடில்
ஏதுவந் தாலும் ஈசன் உவந்தனன்
பாதகர் தன்னைப் பழித்துரை செய்திடில்
நாதனுக் காளன்றி நரகிடை வீழ்வரே.
—*திருமந்திரம்.* ?

ஆண்டான் அடியவர் ஆர்க்கும் விரோதிகள்
ஆண்டான் அடியவர் ஐயமேற் றுண்பார்
ஆண்டான் அடியரை வேண்டாது பேசினோர்
தாம்தாம் விழுவது தாழ்நர காகுமே.
—537

பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தம் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாய்ந்திடும்
சத்தியம் சொன்னோம் சதாநந்தி ஆணையே.
—532

*இப்படி அதிவருணாச்சிரமியாயிருந்த ஞானியானு லும் பாஇம்சை பண்ணலாகாது. இதற்கு உதாரணம்:—*

*சிவஞான தீபம் – பொது – செய் – 5.*

"எவ்வுயிரும் பராபரன்சந் நிதிய தாகும்
இலங்குமுயிர் உடலனைத்தும் ஈசன் கோயில்
எவ்வுயிரும் எம்முயிர்போல் என்று நோக்கி
இரங்காது கொன்றருந்தும் இழிவி னோரை

வவ்வியம தூதர்அருந் தண்டம் செய்து
வல்லிரும்பை உருக்கியவர் வாயில் வார்த்து
வெவ்வியதீ எழுநரகில் வீழ்த்தி மாறு
வேதனைசெய் திடுவரென ஓதும் நூலே.''

ஷை ஷை செய்யுள்-4.

''கொலையாதி நெறியகன்ற ஞானம் தானே
கூறரிய மேலான ஞான மாகும்
கொலையாதி அகன்றொழுகும் தவங்கள் தாமே
குற்றமிலா நற்றவமென் றுரைக்கும் நூலும்
கொலையாதி அகற்றியநல் லறங்கள்தாமே
குவலயத்தில் ஒப்பரிய அறங்க ளாகும்
கொலையாதி அகன்றுபெறும் செல்வம் தானே
கூறினுயிர்க் கிதமான வாழ்வ தாமே.''

என வருவது கண்டுகொள்க.

திருச்சிற்றம்பலம்.

''என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்குக
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்று தேங்குக நிலவி உலகெலாம்.''

திருச்சிற்றம்பலம்.

—பெரிய புராணம்.

# பிரம சொரூபப் பிரிவு

---

*பிரம சொரூபம் பரப்பிரமம்: பரிபூரணமாய், நித்தமாய், சுத்தமாய், நிர்மலமாய், அரிபிரமாதி தேவர் கட்கும் அறிவரிதாய், சுத்த கேவல ககன நிராலம்ப நிர்வெளியாய், ஏகநாயகமாய்த் தனது சத்தியினாலே*

மான் ஆங்காரத்தில் ஈரியல்பாய், செக சீவ பரம் என்கின்ற திரிவிதமாய், சிருட்டி திதி சங்கார திரோபவ அநுக்கிரகம் என்று சொல்லப்பட்ட பஞ்சகிருத்தியங்களும் அவரவற்குத் தனித்தனியே காரணேசுரவடிவுமாய், சகல பிரபஞ்சமும் நிருமித்துப், பிரபஞ்சம் என்றும் பிரமம் என்றும் வேறு வேறு போலே தோற்றுவித்து, அந்தப் பிரபஞ்ச உருக்கள்தோறும் பூவும் வாசமும் போலவும், தேனும் இரசமும் போலவும், கண்ணும் ஒளியும் போலவும், ஆதித்தனும் பிரபையும் போலவும், பொறியும் புலனும் போலவும், புலனும் அந்தக்கரணமும் போலவும், அந்தக்கரணமும் ஆன்மாவும் போலவும் சர்வபூத நிரந்தரமாய், சர்வத்திர பரிபூரணமாய், சர்வலோக தாரந்தரமாய், அநேக கோடி சூரியப் பிரகாச வடிவமாய், பிரளயாக்கினிசமகாந்திரூபமாய், அணுவுக்கணுவாய், மகத்துக்கு மகத்தாய் இருக்கும்.

இந்தப்பிரமத்தில் செக சீவ பரம் தோன்றும் முறைமை வருமாறு:—

## செக சீவ பரம்

சுத்தசைதன்னியமாய் இருக்கிற பிரமசகசத்திலே நிராலம்பம் ஆச்சுது, நிராலம்பத்தில் நிராளம் ஆச்சுது, நிராளத்தில் நிரவயவம் ஆச்சுது, அந்த நிரவயவத்தில் சுத்தப் பிரசித்தமான சிற்சத்தி தோன்றும். சிற்சத்தியில் பரம் தோன்றும். பரநாதத்தில் பரவிந்து தோன்றும். பரவிந்துவில் மூலப் பிரகிருதி தோன்றும். மூலப்பிரகிருதியில் முக்குணங்கள் தோன்றும்.

முக்குணங்களில் அவ்வியாகிருதி தோன்றும். அவ்வியாகிருதியில் இரணிய கர்ப்பம் தோன்றும். இரணிய கர்ப்பத்தில் விராட்டுத் தோன்றும். விராட்டில் மகா ஆங்காரம் தோன்றும். மகா ஆங்காரத்தில் ஆகாயம் தோன்றும். ஆகாயத்தில் வாயுத் தோன்றும், வாயுவில் தேயுத் தோன்றும், தேயுவில் அப்புத் தோன்றும், அப்புவில் பிருதிவி தோன்றும். இப்படியே பூதோதயமாய் அண்ட பிண்டங்கள் தோன்றப்பட்டு நாமரூப செகத்தெல்லாம் பிரமத்தினிடத்தில் ஏகமாய் நிரூபணமாக: விருத்தியொன்றில் நாமரூபங்களினாலே நாமரூபாதி வெகு பேதமானது போலவும், சொர்ணம் ஒன்றிலே(?) வாசாரம்பத்தினால் கடகாதி மகுடாந்த ஆபரணம் ஆனது போலவும், சலமொன்றில் வாயு வசத்தால் குமிழி நுரை தரங்காதி சமுதாயமானது போலவும், தீபமொன்றில் கடாந்தரங்களினாலே செரூபம் தோன்றினது போலவும், மாருதமொன்றிலே வேணு ரந்திரத்தினால் மந்தமாதி ராகமானது போலவும், சுரமொன்றில் பாடாணாதி உபாதியிலிருந்து அநேகமானது போலவும், தொனியொன்றில் வாத்திய பேதத்தினால் அநேகமானது போலவும், [நவையொன்றில் கருமிகள்?] கண்டத்தினால் கரி துரக நானாபேத ரூபம் தோன்றினது போலவும், சசி இரவி ஒன்றில் சல கும்பாதி [சுவாசத்தினால்?] அநேக இன்பம் தோன்றுமாறு போலவும், இலக்கம் ஒன்றில் வெகு விந்துவின் பேதத்தினால் தச, சத, சகத்திராதிக மானாற்போலவும், தந்து படம் ஆனாற்போலவும், படிமக்கலத்தில் உருவம் தோன்றுமாறு போலவும், சித்தொன்றிலே......சீவாதி பேத விகாரமாச்சுதென்று சொல்லப்பட்டது. மேல் சீவதரிசனம், பரதரிசனம், சிவதரிசனம்.

## சீவதரிசனம், பரதரிசனம், சிவதரிசனம்

இனி, சீவதரிசனம், பரதரிசனம், சிவதரிசனம் முதலியவற்றைப் பிரித்தறிவது காரணமாகத் தத்துவங்களை அறியும்படி:— தத்துவம் இருபத்தெட்டு. அதில் சகளவடிவான அசித்தரூபம் இருபத்து நான்கு. அவை - சுரோத்திராதி-5, சத்தாதி-5, வாக்காதி-5, வசனாதி-5, கரணம்-4 ஆக 24. நிட்களவடிவான சித்துரூபம் நான்கு. அவையாவன - புருடன், காலபரம், வியோமம், பரம் ஆக-4. ஆகத்தத்துவம் இருபத்தெட்டு: இந்த இருபத்தெட்டு தத்துவமும் செகசீவ-பரம் என விளங்கும். அசித்துரூபம்-இருபத்து நாலும் செகம்; இது சிவதேகமாம். சித்துரூபம் நாலில் புருடன், காலபரம், வியோமம் மூன்றும் சீவனாகவும் இவை பரதேகமாகவும், பரம் ஒன்றும் பரமெனவும் விளங்கும். மேல் 'தோம்'பத சிரவணம்.

## தொம்பதம்

சீவ உபாதிகளாவன - சுரோத்திரம்-5, வாக்காதி-5, ஆகப்பத்து. சத்தாதி-5, வசனாதி-5 ஆகப்பத்து. உடல்-1, இந்திரியம்-1, அந்தக்கரணம்-4, பிராணவாயு-1 ஆக ஏழு உபாதியோடும் கூடித் தூல தேகவியாத்தியாய் இருப்பன். இதற்கு நவசயிக்கினையாவன:—தூலதேகம், சாக்கிராவத்தை, விசுவன் அபிமானி, இராசத குணம், கிரியா சத்தி, நேத்திரத்தானம், உயுத்த போகம், அகார மாத்திரை, சீவாத்மா என்னும் இந்த நவசயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற சீவாத்மனே தூலதுரியம்.

இந்தத் தூல துரிய லெட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே தூலத்தில் துரியாதீதம். மேல் சூக்கும தேகம். தூலத்தில் உடல் இந்திரியம் இரண்டும் நிற்க அந்தக்கரணம் நாலும், பிராணவாயு ஒன்றும் சூக்கும தேகம் ஆச்சுது. இதற்கு நவசயிக்கினை யாவன:—சூக்கும தேகம், சொப்பனவத்தை, தைசதன் அபிமானி, சாத்துவிக குணம், இச்சா சத்தி, கண்டத்தானம், பரியுக்த போகம், உகார மாத்திரை, அந்தராத்மா என்னும் இந்த நவசயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற அந்தராத்மனே சூக்கும துரியம்.

இந்தச் சூக்கும துரிய லெட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே சூக்கும துரியாதீதம். மேல் காரண தேகம். சொப்பன தேகத்தில் நின்ற உபாதி ஐந்தில் மனமும், புத்தியும், ஆங்காரமும் நிற்க சித்தமும் பிராணவாயுவும் காரண தேகம் ஆச்சுது. இதற்கு நவசயிக்கினையாவன:—காரண தேகம், சுழுத்தியவத்தை, பிராக்ஞன் அபிமானி, தாமத குணம், கிரோதான சத்தி, இருதயத் தானம், ஆனந்த போகம், மகார மாத்திரை, பரமாத்மா என்னும் இந்த நவசயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற பரமாத்மனே காரண துரியம்.

இந்தக் காரண துரிய லெட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே காரண துரியாதீதம். மேல்மகாகாரண தேகம். காரண தேகத்தில் நின்ற உபாதி இரண்டில் சித்தம் நிற்கப் பிராணவாயு ஒன்றும் மகாகாரணதேகம் ஆச்சுது. இதற்கு நவசயிக்கினையாவன:— மகாகாரண தேகம், துரியாவத்தை, பிரத்தியேகாத்மன் அபிமானி,

சுத்த சாத்துவிக குணம், ஞானசத்தி, இலாடத்தானம், ஆனந்த உபாசபோகம், ஓங்கார மாத்திரை, நின்மலாத்மா என்னும் இந்த நவசாரிக்கிளையோடும் கூடிக் கூடாமல் நின்ற நின்மலாத்மனே மகாகாரணதுரியம்.

இந்த மகாகாரணதுரிய லெட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே மகாகாரண துரியாதீதம். இந்த நின்மலாத்மா உபாதியோடும் கூடிநின்ற முறைமையும், உபாதியும் நீங்கித் தன்னை அறியும் தன்மைக்கு உதாரணம் வருமாறு:—

அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்ச ஞானம், அபரோட்சஞானம், சோக நிவர்த்தி, நிரங்குசதிரத்தி ஆக சீவ சத்தாவத்தைகள் ஏழு.

இதில் பிரத்திகாத்மனை அறியாதிருப்பதே அஞ்ஞானம். பிரத்திகாத்மன் இல்லையென்றும், தோற்றுதென்றும் இந்த உபயவித சங்கேதமே ஆவரணம். தேகாபிமானியான சிதாபாச சீவன்தானே கன்மத்துரு, கன்மபல போக்தாரு என்று எண்ணுகிறதே விட்சேபம். 'நீயே பிரமம்' என்னும் வேத வாக்கிய விசார பரியாக வசத்திருந்து பிரத்திகாத்மனை சுருதி ஆசாரியர் வாக்கிய விசாரத்திலிருந்து பிரத்திகாத்மா உண்டென்று அறிகிறதே பரோட்ச ஞானம், இந்தச் சைதன்னியன் சீவ உபாதியை நீங்கும் தன்மை எப்படி? என்னில், தூலதேகம்-1, அந்தக்கரணம்-1, அவித்தை-1, சீவன்-1, சீவசாட்சி-1, சைதன்னியன்-1 ஆக ஆறுவிதமாயிருந்து சைதன்னியன் சீவசாட்சியை

நடத்த, சிவசாட்சி சீவனை நடத்த, சீவன் அவித்தையை நடத்த, அவித்தை அந்தக்கரணத்தை நடத்த, அந்தக் கரணம் தூலதேகத்தை நடத்தும். அது எப்படி யென்னில்,—

குடம்போல தேகம், குடத்தில் நீர்போல அந்தக் கரணம், தண்ணீரில் அழுக்குப்போல அவித்தை, ஆகாசம் பிரதிபிம்பம்போல சீவன், குடத்தாள் ஆகாசம்போல சிவசாட்சி, வெளி ஆகாசம்போல சைதன்னியன் என்க. ஆகையால், இதற்கு நிவிர்த்தி வருமாறு:—

ஆகாச பிரதிவிம்பமும், குடத்துள் ஆகாசமும், வெளியாகாசமுமாக மூன்றுவிதமாகக் கண்டாலும் ஆகாசம் ஒன்றானதுபோல சீவனும், சிவசாட்சியும், சைதன்னியமும் ஒன்று. தண்ணீரும் அழுக்கும் போல ஒப்புமையால் அந்தக்கரணமும் அவித்தையும் ஒன்று. குடம்போலத் தேகமாகக் குடம் உள்ள அளவுமே தண்ணீர் இருக்கிறது. அதுபோல, தேகம் உள்ள அளவும் அந்தக்கரணமும் அவித்தையும் இருக்கும். இது தேகம் என்றும், அந்தக்கரணம் என்றும் அறிகிறது சிவசாட்சி. அந்த அறிவாகிய ஞானக்கினி யினாலே தேகத்தை மித்தையாகப் பார்த்திடில் குடம் உடைந்தவுடனே தண்ணீர் சிந்திப்போகிறதுபோல அவித்தையும், அந்தக்கரணமும் நாசமாம். அப்போது குடத்துள் ஆகாசமும் வெளி ஆகாசமும் என இரண்டாக இருந்ததும் இல்லை, கூடினதுமில்லை, குறைந்தது மில்லை, போக்கு வரவுமில்லை, சும்மா இருந்தபடியே

இருந்தது. அதுபோல, சீவசாட்சியும் சைதன்னிய மும் என்றறிக. இதுவே சீவன் முத்தி. இதற்கு இலக்கணை விட்டலக்கணை யென்க. இதற்கு உதாரணம்:-

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே.

—2289

தொம்பத சிரவணம் முற்றும்

---

தொம்பதலட்சணம்

தொம்பதம் மாயையில் தோன்றிடும் தற்பதம்
அம்பரை தன்னில் உதிக்கும் அசிபதம்
நம்புறு சாந்தியில் நண்ணுமவ் வாக்கியம்
உம்பர் உரைதொம்தத் தசிவாசி யாமே.

—2492

என்றது பஞ்சாட்சரம்: நம தொம்பதம், சிவ தற்பதம், ய அசிபதம்; இவை தூலம். சூக்குமம்—ய தொம் பதம், வ தற்பதம், சி அசிபதம். நகாரம் வகாரத்தில் அடங்கும். மகாரம் சிகாரத்தில் அடங்கும். சூக்கும பஞ்சாட்சரம் மூன்று பதமாயிருக்கும். இந்தப் பர மாத்மா சைதன்னியமாய் ஆத்மாவாகவும், ஏகமாகவும் நின்றது எப்படி? என்னில், 'நமயவசி' என்பது: நகாரம்-திரோதம், மகாரம்-மலம், ய காரம் - ஆத்மா, வகாரம்-அருள், சிகாரம்-சிவம். நகார-மகார-யகார-வகா ரம் வரைக்கும் யகாரம் உயிர் ஆகையால் சீவாத்மா என்று பேராயிட்டு. சிகாரத்தில் பரம் ந-ம பொருந் தியிருக்கும். உபாதி நீங்கின இடத்தில் சீவாத்மாவே பரமாத்மாவாம். இதற்கு உதாரணம்:—

தத்தொ மசியே தகாநல்ல வேதாந்தம்
அத்த மனுவிரண்டும் அயிக்க சிவோகமாம்
முத்த முதுபொருள் மூசச் சமயத்தில்
கத்து மதமென் ருருங்கைக் கொண்டதே. ?

*என்பதுங் கண்டுகொள்க.*

## தொம்பதலட்சணம் முற்றும்

## பரதெரிசனம்

*தற்பத சோதனம், பரவுபாதிகளாவன:—சர்வக்ஞன் சர்வேசுரன்; சர்வகாரணன், சர்வாந்தர்யாமி, சர்வ சிருட்டி, சர்வதிதி, சர்வசங்காரன் ஆக உபாதிகள் ஏழு. இதற்கு அவத்தைகளாவன - சோதி, ஈசன், சிவன், பிரமாதா, பிரமாணம், பிரமேயம், பரம் ஆக அவத்தைகள் ஏழு. இதனைத் தரிசிக்கும் முறைமை: சோதியாயிருந்தால் பிரமம் என்றும், மாயையில் தோய்ந்தால் ஈசன் என்றும், அவித்தையில் கூடினால் சிவன் என்றும், காரணத்தினால் கூடினால் பிரமாதா என்றும், இந்திரியங்களில் கூடினால் பிரமாணம் என்றும், விடயங்களில் கூடினால் பிரமேயம் என்றும், அறிவில் தோய்ந்தால் பரம் என்றும் இப்படிப் பர அவத்தை ஏழு.*

*முன்சொன்ன உபாதியோடும் கூடிநின்ற புருடனுக்கு விராட்டு தேகம் ஆச்சுது. இதற்கு நவசயிக் கினையாவன:—விராட்டு தேகம், உற்பத்தி அவத்தை, பிரமன் அபிமானி, இராசத ஆங்காரமே குணம், கிரியா சத்தி, சூரியத்தானம், சர்வகர்த்திருத்துவமே போகம்,*

அகார மாத்திரை, பூதாத்மா. இந்த நவசாயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற பூதாத்மனே விராட்டுத் தூரியம். இந்த விராட்டுத் தூரிய லெட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே விராட்டுத் தூரியாதீதம், மேல் இரணியகர்ப்பதேகம்.

உபாதி ஏழில் சர்வக்ஞன், சர்வேசுரன், சர்வகாரணன், சர்வாந்தர்யாமி ஆகிய இந்த நாலு உபாதியும் விராட்டு தேகத்தில் நிற்க சர்வ சிருஷ்டி, சர்வ திதி, சர்வ சங்காரன் என்ற மூன்று உபாதியும் கூடிநின்றதால் பரதுவுக்கு இரணியகர்ப்பன் ஆச்சுது. இதற்கு நவசாயிக்கினையாவன:—இரணியகர்ப்ப தேகம், திதி அவத்தை, விட்டுணு அபிமானி, சாத்துவிக அகங்கார குணம், இச்சா சத்தி, சந்திரத்தானம், சர்வ பாலனத்துவமே போகம், உகாரமாத்திரை, சூத்திராத்மா இந்த நவசாயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற சூத்திராத்மனே இரணியகர்ப்பதூரியம். இந்த இரணிய கர்ப்ப தூரிய லெட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே இரணிய கர்ப்ப தூரியாதீதம்.

மேல் வியோம மயம் அவ்வியாகிருததேகம் ஆச்சுது. இதற்கு நவசாயிக்கினையாவன:—அவ்வியாகிருத தேகம், பிரளயாவத்தை, உருத்திரன் அபிமானி, தாமதாங்காரமே குணம், கிரோதாயிசத்தி, அக்கினித் தானம், சர்வதிதியே போகம், மகார மாத்திரை, சுத்தாத்மா. இந்த நவசாயிக்கினையோடும் கூடிக் கூடாமல் நின்ற சுத்தாத்மனே அவ்வியாகிருததூரியம். இந்தத் தூரிய லெட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே அவ்வியாகிருத தூரியாதீதம்.

மேல் மூலப்பிரகிருதி தேகமாவது:—

உபாதி மூன்றில் சர்வசங்காரன் என்ற உபாதி ஒன்றும் பரம். இதற்கு மூலப் பிரகிருதி தேகம் ஆச்சுது. இதற்கு நவசாரிக்கிளையாவன — மூலப்பிரகிருதி தேகம், சர்வசாட்சி அவத்தை, சகரன் அபிமானி, சுத்த சாத்துவிக ஆங்காரமே குணம், ஞானசத்தி, பிரமாண்டாதித்தானம், சர்வ ஐசுவரிய சம்பன்னத்துவமே போகம், ஓங்கார மாத்திரை மகாத்மா இந்த நவசாரிக்கிளையோடும் கூடிக் கூடாமல் நின்ற மகாத்மனே மூலப்பிரகிருதித்துரியம். இந்தத் துரிய லெட்சணத்தையும் விட்டு மேலாகி நின்றதே மூலப்பிரகிருதித்துரியாதீதம். இப்படியே பர உபாதியோடும் கூடிக்கூடாமல் நின்ற மகாத்மனே சுத்தப்பரம் என்று அறிக. இதுவே பரமுக்தி. இதற்கு உதாரணம்:—

மரத்தை மறைந்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்துள் மறைந்தது பார்முதற் பூதமே.

என்பது கண்டுகொள்க —2290

தற்பதமனனம் முற்றும்.

---

## அசிபத நிதித்தியாசனம்

அசிபதமாவது சிவம். அந்தச் சிவத்துக்கு உபாதி அபிமானத்தாள் அடக்க மாயையால் அபிமானி மூன்று. அவை:—சித்சொரூபை, பிரசாபத்தியன், பற்புவசாங்கன் என்ற மூன்று அபிமானியோடும் கூடி, சிவபரம்

இரண்டும் சமரச அயிக்கியமே சிவதெரிசனம். இதற்குக் கண்டமான குண அவத்தை நாலு, அவை வருமாறு:— தொம்பதத்தில் தூலதேகமும், தற்பதத்தில் விராட்டு தேகமும் ஏகார்த்தமானதே. அசிபதத்தில் கண்ட பரமே - சாக்கிரம். இதற்கு அபிமானி - சிற்சொலிதை. தொம்பதத்தில் சூக்கும தேகமும், தற்பதத்தில் இரணியகெர்ப்ப தேகமும் ஏகார்த்தமானதே. அசிபதத்தில் கண்ட விசுவக்கிராசனே - சொப்பனம். இதற்கு அபிமானி - பிரசாபத்தியன். தொம்பதத்தில் காரண தேகமும், தற்பதத்தில் அவ்வியாகிருத தேகமும் ஏகார்த்தமானதே. அசிபதத்தில் கண்ட உபசாந்தமே-சுழுத்தி. இதற்கு அபிமானி புற்புவசாந்தன். தொம்பதத்தில் மகாகாரண தேகமும், தற்பதத்தில் மூலப்பிரகிருதி தேகமும் ஏகார்த்தமானதே. அசிபதத்தில் கண்ட துரியம் இதுவே.

## அவத்தை நாலும் முற்றும்.

இதற்குப் பிரமாணம் வேதவசனம் காண்க. மேல் சி...த்திற்கண்டமான நிர்க்குண துரியம்-4, துரியாதீதம்-4. அவை வருமாறு எப்படி? என்னில்,—

அசிபதத்தில் இருக்கிற அகண்ட பரமாத்மா சைதன்னியனிடத்திலே பிண்டப் பிரமாண்டம் முதலான சகல தத்துவக் கருவிகரணாதிகள் எல்லாம் சமரச ஐக்கியமான நிலையிலே இங்கே நவசயிக்கின்னயில்லை. இதுவே அசிபதத்தில் விசுவக்கிராசம் என்கிற நிர்க்குண பிரதமத்துரியம் இந்த விசுவக்கிராசம் என்கின்ற

துரியமே ஆகி என்கின்ற சுத்தரூபபதத்திலே நிர்க்குணம் ஆகி நின்றதே விசுவக்கிராச துரியாதீதம். இந்த விசுவக்கிராசம் என்கின்ற துரியாதீதம் முப்பூசாந்தம் என்கின்ற துரியத்திலே ஏகார்த்தமானதே. அசிபதத்திலே அகண்ட நிர்க்குணமானது இத்துரியம். இந்தப் பூசாந்தம் என்கின்ற துரிய துரியாதீதமும், புவிசாந்தமென்கின்ற துரியாதீதத்திலே ஏகார்த்தமானதேயாம்.

அசிபதத்திலே அகண்ட நிர்க்குணமான துரிய துரியம் இந்தப்புவிசாந்தம் என்கின்ற துரியமே நிராளம் என்கின்ற பதத்தில் நிர்க்குண சொரூபமாகி நின்றதே புவிசாந்த துரியாதீதம். அந்தப் புவிசாந்தம் என்கின்ற துரிய துரியாதீதம் துரியத்திலே ஏகார்த்தமானதே. அசிபதத்திலே கண்ட நிர்க்குணமான சதுர்த்த துரியம். இந்தப் பரதுரியமே நிராலம்பத்திலே நிர்க்குண சொரூபமாகி நின்றதே பரதுரியாதீதம். இதுவே அசிபதத்தில் கண்ட நிர்க்குணமான சதுர்த்த துரியாதீதமும். இதற்கு இலக்கணை விட்டுவிடாத இலக்கணை. வாக்கியம் கண்ட வாக்கியம். 'சொயம் தேவதத்தா' என்கின்ற சுருதி வாக்கியத்தில் கண்டு கொள்க. இதுவே சீவன்முக்தி. இதற்கு உதாரணம்:—

**காரிய மேழ்கண் டறுமாயைப் பாழ்விடக்**
**காரண மேழ்கண் டறும்போதப் பாழ்விடக்**
**காரியம் காரணம் காணுமப் பாழ்விடச்**
**சீரிய லான சிவமென லாமே.**

துரிய துரிய துரிய துரிய
துரிய துரிய துரிய துரிய
துரிய துரிய துரிய துரிய
துரிய துரிய பரானந்தி தானே.

*என்பது கண்டு கொள்க.* ...............?

*இப்படி செக சீவ பர சிவமாய், சகல தேவாதி தேவர்கள் இருதய ஏகமான வஸ்துவாய், அனந்த கோடி பிரமாண்டங்களுள்ளும் புறம்பும் எங்கும் சர்வத்திர பரிபூரணமாய், அகண்டாகாசமாகி மூலத்தம்பமானதுவே வஸ்து. இது நாமரூப செகம் இறந்து பஞ்சப் பிரளயம் பண்ணின பிறகு மிஞ்சின அதுவே வஸ்து. சச்சிதானந்த வடிவமாய் இருந்த பொருளும் இதுவேயாம்.*

சச்சிதானந்த வடிவம் எப்படி? என்னில்,—

*அசத்தியத்துக்கு இடம் கொடாததே சத்து. சடத்துவத்திற் பொருந்தாததே ஞானம். அப்பிரியத்துவம் இல்லாததே ஆனந்தம் என்க. இன்னம் பிரமாதி பிபீலிகாந்தமான நாமரூபங்களும், பூலோகாதி சத்திய லோகாந்தமான சகல லோகங்களும் அழிந்துபோக அழியாமல் நிற்கின்றது சத்து. அங்ஙனம் அழிவின்றி நிற்கின்ற சத்து என்கிற வஸ்துவை சையுத்தத்திலும் திரமாக அறிகிறதே ஞானம். அதனை அறிந்து பரவச பாவத்திலே சுகித்துத் தன்னைத் தான்மறந்ததுவே ஆனந்தம். இன்னம் இவை பாவநாசகமாய் நின்று சீவ பஞ்சகத்தை நீங்கும் தன்மை எப்படி? என்னில்,—*

பரபஞ்சகமாவன—சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம், பரிபூரணம் ஆக-5. சிவபஞ்சகமாவன—அசத்து, சடம், துக்கம், அநித்தியம், கண்டிதம் ஆக-5. இதற்கு நிவிர்த்தி எப்படி? என்னில், சத்தை அறியின் அசத்துக் கெடும். சித்தை அறியின் சடத்துவம் போம். ஆனந்தத்தை அறியின் துக்கம் போம். நித்தியத்தை அறியின் அநித்தியம் போம். பரிபூரணத்தை அறியின் கண்டிதம் போம். இப்படிப் பரபஞ்சகத்தால் சிவபஞ்சகம் நிவிர்த்தியாவதே சிவபஞ்சகம். இப்படி சத்திய ஞான ஆனந்த நித்தியம் கண்டால் பரிபூரண அத்துவித சுத்த சைதன்னிய பரப்பிரமம் அறிய சிவம் சித்தம். சுத்த சைதன்னியமாயிருக்கிற பிரமத்தை அறி பிரமாதிகளாலும் அறியப்படாது. இதற்கு உதாரணம் பல உள. விரிக்கிற் பெருகும்.

இப்படி வாக்கு மனோபாவங்கள் மீறி ஞானமென்கின்ற சமாத்திறத்......நிரஞ்சன சூக்கும கலையாய் ஒரு பிரசோத்திருஷ்ட பிரபாபீடமாய்......பாவமென்கின்ற சமாத்தியுக்க......மாய் இருக்கிற பிரமமான படியினாலே யாவருக்கும் அறிவரிதாய் இருக்கும். அறியும்பொருட்டு எப்படி? என்னில்,—அவன் அருட்கடாட்சத்தினாலே சுருதி குரு சுவானுபோகத்தால் அறிவிக்க அறியவேண்டும். அது எப்படி? என்னில்,—பரமகுருவான ஸ்ரீ தட்சிணாமூர்த்தியானவர் ஞானமோன......ரூபணமென்ற முத்திராத் திரயங்களினாலே நந்திகேசுர தேவருக்கு அநுக்கிரகம் பண்ணினது. சுருதி:—இருக்குவேத முடிவில் 'பிரக்ஞானம் பிரமம்' எனவும், யசுர்வேத முடிவில் 'அகம்பிரமாஸ்மி'

எனவும், சாமவேத முடிவில் 'தத்துவமசி' எனவும், அதர்வணவேதமுடிவில் 'அயமாத்மாபிரமா' எனவும் நாலுவேதத்தின் முடிவிலும் நாலு மகா வாக்கியங்களும் இப்படிச் சொல்லும். இந்தப்பொருள்களைச் சுகருக்கு வியாசர் உபதேசித்தார்.

இருக்குவேத முடிவில் 'பிரக்ஞானம் பிரமம்' என்றதற்கு வியாக்கியான கிரந்தத்தில் கூறியபடி. இதற்கு அர்த்தம்—போதமானவன் இருதய ஆகாசத்திலே எங்கேயும் உதித்திருந்து சோத்திரம் இடமாக நின்று சத்தத்தைக்கொண்டு அறிகிறபடியி னாலும், தொக்குவினிடமாக நின்று பரிசத்தை அறி கிறபடியினாலும், சட்சுவினிடமாக நின்று ரூபத்தை அறிகிறபடியினாலும், சிங்ஙுவையிடமாக நின்று ரசத்தை அறிகிறபடியினாலும், ஆக்கிராணமிடமாக நின்று கெந்தத்தை அறிகிறபடியினாலும் இந்த அறிவுக் குப் 'பிரக்ஞானம் பிரமம்' என்று பேராச்சுது.

பிரக்ஞானம் பிரமம் ஆனது எப்படி? என்னில்,— பிரமா, தேவேந்திரன், தேவாதிகள், மனுஷர், அசுவம், பசு முதலாகிய மிருக கணங்கள், சிவசெந்துக்கள், முதலானதும் சரீரம் பின்னமாயிருந்து இந்தச் சைதன் னியம் ஏகமாய் எங்கும் வியாபித்திருக்கிறபடியினாலே இந்தப் 'பிரக்ஞானமே பிரமம்' என்றபடி.

இனி, எசுர்வேத முடிவில் 'அகம் பிரமாஸ்மி' என் றதற்கு வியாக்கியான கிரந்தத்தில் கூறியபடி. இதற்கு அர்த்தம் வருமாறு:—

அறிவுக்கு அகம் என்று பேர் வந்தது எப்படி? என்னில்,—இந்தத் தேகத்திலே வித்தியாதிகாரியாய், பரிபூரணமாய், எங்கும் வியாபகமாய், பரமாத்மாவாகச் சர்வபுத்திக்குச் சாட்சியாக இருக்கிறபடியினாலே இந்த அறிவுக்கு அகமென்று பேராச்சுது. அகம் என்று சொல்லி வர்ணிக்கப்பட்டுக்கொண்டு பரிபூரணமாயிருக்கிறதும், பரமாத்மாவாய் இருக்கிறதும் நாம் என்று அறிவினால் அறியப்படுகிறதினாலே அகமே பிரமம் ஆனது என்றபடி.

சாமவேதமுடிவில் 'தத்துவமசி' என்றதற்கு வியாக்கியான கிரந்தத்தில் கூறியபடி இதற்கு அர்த்தம் வருமாறு:—

தற்பதம் என்று பேர் வந்தது ஏது? என்னில்,— ஏகமாய், இரண்டற்று ஒன்றென்று சொல்லப்படுகிறதாய், நாமரூபம் இல்லாததாய், பிரபஞ்ச சிருட்டிக்கு முன்னும் பின்னும் எப்போதும் உள்ளதாய் இருக்கப்பட்டபடியினாலே 'தற்பதம்' என்று பேராச்சுது.

தொம்பதம் ஆவது ஏது? என்னில்,— இந்தத் தேகமாய் இருக்கப்பட்ட இந்திரியங்களைக் கடந்து சர்வாந்தர்யாமியாய் இருக்கப்பட்டபடியினாலே 'தொம்பதம்' என்று பேராச்சுது.

அசி என்றது தற்பதம் தொம்பதம் என்ற இரண்டின் ஐக்கியம். ஆகையால், இந்தப் பதத்திரயங்களில் வியாபியாய், சத்தியம்-ஞானம்-ஆனந்தம்-ஆனந்தானந்தம் என்கின்ற நாலுவர்ணமுமாய், தற்பதம்-தொம்பதம்-அசிபதம் என்கின்ற மூன்று பதமுமாய், விட்ட

லக்ஷணை - விடாதலக்ஷணை - விட்டுவிடாதலக்ஷணை என்கின்ற மூன்று இலக்ஷணையுமாய், சொரூப நிச்சயம் அர்த்த நிச்சயம் பூரண நிச்சயம், இரண்டாய் விளங்கிய முடிவு என்னும் பன்மை, அப்படிப் புதுமை என்கின்ற ஆறு குறிப்புமாய், கேள்வி இறந்தது (?), வீரம் இறந்தது, தேசம் இறந்தது, திசை இறந்தது, காலம் இறந்தது, தரிசனம் இறந்தது, நிர்ணயம் இறந்தது, ஆனந்தமானது என்னும் பட்டு இலவுமாய் (?) சொகம்-சிவன்-பரம்-பரானந்தம்- ஆனந்தாதீதம்- அப்பால் என்கின்ற சப்தமாதரிசனையுமாய் இருக்கின்ற உண்மையே இந்த நாலு மகாவாக்கியம் என்று சொல்லப்படும். அவை எப்படி? என்னில்,—

நாலு மகாவாக்கியத்திலும் ... 'தத்துவமசி' மகா வாக்கியத்திலே சொல்லுகையால் இதற்கு அர்த்தமும் இதனிடத்தில் கண்டுகொள்க. இங்ஙனம் மகாவாக்கிய வியாபியாய் நின்ற அறிவே பிரமம் என்பது.

அதர்வண வேத முடிவில் 'அயமாத்மா பிரம' என்ற வாக்கியத்துக்கு வியாக்கியான கிரந்தம் கூறிய படி அர்த்தம் வருமாறு:—

சுயம்பிரகாசமாய், பிரத்தியக்காத்மாவாய், மூர்த்தி ரூபமாய்க் காணப்படுகிறவரை இவர்தாம் பிரமம் என்று அறிவுள்ளபேரால் சொல்லப்படுகிறார். அந்த அறிவு தானே தேகாந்த......த்மா வியாபித்து இருக்கிறபடி. யினாலே இந்த அறிவுக்கு 'அயம்பிரம்ம' என்று பேராச்சுது. ஆத்மா பிரமம் ஆவது எப்படி? என்னில்,

காணப்படுகிற சர்வசெகத்திலும் பிரமம் உண்டென்று சொல்லப்படுகிறது. பிரம்ம சத்தத்திலே அந்தப் பிரமம் சொயம்பிரகாசமாய் ஆத்மரூபமாய் இருந்து சொல்லப்படுகிற அறிவே பிரமம் என்பதாக நந்திகேசுரதேவருக்குச் சிவன் அனுக்கிரகம் பண்ணினார் என்றபடி.

## நாலு மகாவாக்கியவுரை முற்றும்

இனி, மேல் சுகருக்கு வியாசர் உபதேசித்த வாக்கியம்; அர்த்தமாவது 'பிரபஞ்சரூபம்பிரம்மோகம்'என்றது, பிரமத்தினிடத்திலே பிரபஞ்சம் தோன்றினது விவர்த்தமென்றாலும் பாம்பாய்த் தோன்றினது பழுதையைத் தவிர வேறு இல்லாததுபோல, பிரபஞ்சமாய்த் தோன்றினது பிரமத்தைத் தவிர இல்லாதது போலவும் பிரமத்தினிடத்திலே பிரபஞ்சம் உண்டானது. ஆத்மா என்றாலும் பிதாவின் வீரியந்தானே பிள்ளை சொரூபம் ஆனாற்போலவும், சாதி சுக துக்கம் அபேதமானாற்போலவும், பிரமத்தினுடைய சத்தி சொரூபம் பிரபஞ்சத்தினிடத்திலே இருந்தபடியினால் செயலற்ற சாதியும் ஆனந்தசுகமும் உபேட்சாதுக்கமும் அபேதமானபடியினாலேயும் பிரபஞ்சம் பிரபஞ்சமாகத்தோன்றினது பிரமத்தைத்தவிர இல்லாததுபோலவும், பிரமமும் உற்பத்தி என்றாலும் நுரை திரை குமிழியாய்த் தோன்றினது சமுத்திரத்தைவிட இல்லாததுபோலப் பிரபஞ்சமாகத் தோன்றினதாம். பிரபஞ்சமும் நித்தியம் என்றாலும் எக்காலத்திலும் தோன்றாமல் ஒன்றுகண்டால் ஒன்று காணாமல் போகிறதினாலும் வேறென்பதுண்டாது.

பிரமமும் பிரபஞ்சமும் வேறு என்பது ஏதனுல்? என்னில்,— சொல்லிலே பேதம், பொருளிலே அபேதம் ஆனபடியினுலே, 'பிரபஞ்சரூபமே பிரம்மோகம்' என்றது.

'ஏகமேவாத்விதீயம் பிரம்மோகம்' என்றது:— விசாதிகம், சசாதிகம், சுகதபேதம் இந்த மூன்றுக்கும் அர்த்தம். மரத்துக்குக்கல்லு விசாதிகம், மதுமாமிசம் சசாதிகம், கொம்பு கொடி பூக்கள் சுகதபேதம், இந்த மூன்றும் அற்றது பிரமம். என்றும் மனேசங்கற்பமே பிரபஞ்சம். மனேசங்கற்பம் அற்ற இடத்திலே பிரபஞ்சம் இல்லாதபடியினுலே பிரமத்தைத் தவிரப் பிரபஞ்சம் இல்லாதபடியினுலும்; மண்ணை விடச் சால் கரகம் என்னும் இந்த நாமரூபம் இல்லாததுபோல சச்சிதானந்த பிரமத்தைத் தவிர பூதபௌதிக நாமரூபப் பிரபஞ்சம் இல்லாதபடியினுலும்; கானற்சலம் சத்தியமாய்க் கண்ணுக்குத்தோன்றினுலும் மாபூமியிலே சத்தியம் சலமாய்த்தோன்றினது மனசுக்குப் பொய்யாய்ப் போனுற்போலவும், பிரபஞ்சம் கண்ணுக்குச் சத்தியமாய்த் தோன்றினுலும்......பிரமத்தைத் தவிரப் பிரபஞ்சம் பொய்யானபடியினுலேயும் 'ஏகமேவாத்விதீயம் பிரம்மோகம்' என்றது.

பிராக் அபாவம், பிரத்துவம்சாபாவம், அன்னியோன்னியாபாவம், அத்தியந்தாபாவம் ஆக-4, இந்த நாலும் பிரமத்தைத் தவிரப் பிரபஞ்சமில்லை என்பது.

'பாவாபாவாதீதமே பிரம்மோகம்' என்றதற்கு அர்த்தம். பாவம் என்பது உள்ளது, அபாவம் என்பது இல்லாதது; ஆதலின், உள்ளதான பிரமத்துக்கும் இல்லதான பிரபஞ்சத்துக்கும் அப்பாற்பட்ட பொருளையே அதீதப்பிரமம் என்றது. இதற்குச் சங்கை: அதிட்டான ஞானம் இல்லாதிருந்தால் அஞ்ஞானமாய்ப் போம் என்கின்ற சங்கைக்கு உத்தரம் பிரபஞ்ச தொந்தமே பெந்தம் என்று சாத்திரம் சொன்னபடியினாலே அதிட்டான முள்ளதையும் ஆரோபம் உண்டென்றபடியினாலே அதிட்டான ஞானம் போகவேணும். ஆகையால், 'பாவாபாவாதீதமே பிரம்மோகம்' என்றது.

சதாகாலமும் பிரம்மானுபோகமாயிருக்கவேணும் என்றால், அநுபவிக்கிறது ஒன்றும் அநுபவிக்கப்படுகிறது ஒன்றும் என இரண்டாம்: இது துவிதமானபடியினாலேயும் விசாரித்து, விசாரஞானத்தினாலே அறிந்ததுபோதும் என்று அறிந்ததும் அறியப்படுகிறதுமாக இரண்டாம்: ஆகையினாலும், 'பிரமமேநானென்' என்றால் நானாகாத அஞ்ஞானம் பிரமத்துக்கு வரும் ஆனபடியினாலும், எங்கும் சச்சிதானந்த லட்சணமாய்க் கண்டிருக்கிறதே போதும் என்றால் சத்து என்றால் அசத்தும் உண்டு, சித்தென்றால் சடமும் உண்டு, ஆனந்தமென்றால் துக்கமும் உண்டு, வஸ்துலட்சணம் உண்டு என்றால் மாயாலட்சணமும் உண்டாம் ஆகையினாலும் 'பாவாபாவாதீதமே பிரம்மோகம்' என்றது.

'சுவாநுபோகாதீதமே பிரம்மோகம்' என்றதற்கு அர்த்தம். அதிட்டானமும் ஆரோபமுமாய் இருக்கிறது அதுவே சுபாவம் ஞானமானபடியினாலே சுவா

நுபோகம் என்பது. அதற்கு அதீதம் என்பது சுபா வம் தானாய் இருக்கிறோம் என்கிற நிச்சயமும் போகி றதே நிலை என்றது. அதுவே குற்றமற்ற நிலை. சுபா வமே தானேனன் என்றால் சங்கற்பமாகும். சங்கற்ப சூனியம் அல்லவோ நிலையானபடியினாலும், சுபாவமே தானாய் இருந்தால் நினைவாகாதபடியினாலும், சுபாவமே தானாயிருந்தால் சமாதியாம். அது சாக்ஷி ஆகையினா லும் அதிட்டானத்தைத் தான் என்கிற பாவமே, தானேனன் என்றால் துவிதமாம். இதுவும் ஒரு முத லாம் ஆகையினாலும் 'சுவானுபோகாதீதமே பிரம்மோ கம்' என்றது: சும்மா இருக்கிறதே நிலை என்றால் மூட மாம் ஆகையால் சுவானுபோகாதீதமே பிரம்மோகம் ஆம். இவை கேட்டுத் திருப்தியடைந்து பிற்பாடு உள்ளபடி அனுக்கிரகித்தார். சுகரும் கிருதார்த் தத்தை அடைந்தார்.

## சுருதிமகாவாக்கியார்த்தம்

மேல் அந்நுவய வாக்கியம் 'தத்தோமசி' என்றது பிரமம் நீ ஆனாய் என்று சொல்லும். வெதிரேகி வாக் கியம் 'தோம்ததசி' என்றது நீ பிரமமானாய் என்று சொல்லும். அகண்டவாக்கியம் 'சோயம்தேவதத்தா' என்றது. இதற்கு அர்த்தம்: ஒரு புருடன் ஒருகாலத் தில் கிருகத்தம் பண்ணிக்கொண்டிருந்து, பின்னொரு காலத்தில் இராசாவாக இருந்து, பின்னொருகாலத்தில் சர்வசங்கப் பரித்தியாகம் பண்ணி சந்நியாசியாய் இருந்த இடத்திலே அங்கங்கே கண்ட அடையாளக் குறிகளைப் பார்த்து முன் கிருகத்தனாய் இருந்தவனும், பின்பு

இராசாவாய் இருந்தவனும், பின்பு சந்நியாசியாய் இருந்தவனும் ஆகிய ஒரு தேவதத்தனே பூதகால தேச வரியா விசிட்டனாய் நின்றது போல; சீவனாகியும், பரமாகியும், சிவமாகியும், சராசரம் ஆகியும் இப்படிப் பலப் பல கற்பிதங்களாய் நின்றது பிரமம் ஒன்றுமே. இது 'சொயந்தேவதத்தா' என்ற வாக்கியார்த்தம் ஆம்.

மேல் 'தோம்மேவ பிரத்தியட்சம் பிரம்மா' என்றது நீயே சாக்ஷாத் பிரமம் என்று சொல்லும். 'பிரம்மைவ வேதம் சர்வம்' என்றது பரப்பிரமமே சர்வாத்ம சொரூபவியாபகமாகி நின்றது என்று சொல்லும். 'இதம் சர்வம் பிரம்மா' என்றது தோன்றப்பட்ட நாமரூப செகத்தெல்லாம் பரப்பிரமமே என்று சொல்லும். 'சர்வாவிருதம் பிரம்மா' என்றது கட படாதிகள் எல்லாம் ஆகாசம் உட்கொண்டாற்போல விசுவ செகத்தெல்லாம் பிரமமே உட்கொண்டது என்று சொல்லும். 'சிவோகம் பிரம்மேவ சத்தியம்' என்றது சிவமாகிய பிரமம் நீ என்று சத்தியமாகச் சொல்லும். அவை மேற்சொன்னவிஸ் [illegible] என்ற சர்வதாரணமாயிருக்கிற அசாரமந்திர வியாக்கியானத்திற்கண்டு கொள்க. 'சர்வம் கல்பிதம் பிரம்மா' என்றது சர்வமும் பிரமபீஜம் என்றறிக என்பதாம். 'சர்வாவலித்வம் பிரம்மா' என்றது சர்வமும் பிரமத்தினிடத்திலே வியாப்தி என்றறிக. 'புருஷபிவேதம் சர்வம்' என்றது சர்வமும் பிரமத்தில் அடங்கும் என்று அறிக என்பதாம்.

## சுருதிமகாவாக்கியார்த்தம் முற்றும்

## வேதாந்தசார அநுபூதித் திரட்டு

இதனைச் சுத்த வேதாந்தத்திலே நித்திய சுத்த புத்த முத்த சத்திய பரமானந்தத்துவ சொரூபமாகிச் சித்த விசிராந்தித்தலமானதே நிர்க்குண பரப்பிரமம் என்று சொல்லும்.

இதனை வீரசைவ சித்தாந்தத்திலே ஆதிசத்திய ரூப, நிரவயவ, நிராள, நிராலம்ப, ஞான சூனியத்தல மான நிர்க்குண மகாலிங்கம் என்று சொல்லும். இப்படி. நிர்க்குணபரப்பிரமம், நிர்க்குணபதி, நிர்க்குண மகாலிங்கம் என்று சொல்லுகிற நாமபேதகம் அல்லது வஸ்து ஒன்றே ஆம்.

மேல் காரியகாமி உண்டு என்னாமல், இல்லை என்னாமல் அகங்கிருதி, நிரகங்கிருதி தோற்றாமல் கடாடந்தியாகிற கேவலப் பிரமத்தில் ஏகத்துவம் ஆவதுபோல, கேவலம், நித்திய ரூபமாய் ஆனந்தாதீத சகசமாய் சும்மா இருந்தபடி இருப்பதே மோட்சம். இந்த முறைமையைச் சுருதி மிருதி சிதாசாத்திரங்கள் சொல்லுகிற உண்மையைக் குருவினிடத்திலே கேட்டுக் கதியடையக்கடவர். இப்போது சொன்ன வழியே நின்ற அநுபோகம் சுத்த ஞானிக்கும் வியவகாரவசத்தினாலே வருகிற வாசனையாகிய பாவத்துக்கும் திருப்பித் திருப்பிப் பண்ணுகிற சிரவண மனனங்களே பிராயச்சித்தம் என்கிறதைச் சொல்லும்படி: பிரத்தியேகாதி அறிவே நான் என்றிருக்கிற சீவாத்மா நிரந்தரம் பண்ணுகிற சிரவண மனனங்களினாலே மேன்மேலும் சொலிக்கப் பட்டிருக்கிற ஞானாக்கினியிலே வெந்து துலங்கி

ஓட்டவைத்த தங்கம்போல ஒரு மலமும் அற்றுச் சுத்த சைதன்னியமாய் இருக்கிற தானேதானாய்த் துலங்கு வன் என்பதாம்.

இன்னம் இருதய ஆகாசத்திலே எந்நேரமும் உதித்திருந்து சோதிர்மய பானுவானவன் அஞ்ஞான அந்தகாரத்தை நீக்குவித்தபடியினாலேயும், சர்வவியாபி யாய் இருந்து சர்வத்தையும் தோற்றுவிக்கையினாலே யும், 'அகம்பிரமாஸ்மி' என்கிற சுருதி மகா வாக்கியாதி விசாரத்தினாலேயும் அஞ்ஞானப் பிரசங்கத்துக்கு இட மில்லை......உபாசனையினாலே சிவம் சித்தியாம்.

இந்த உபாசனை தப்பில் குருவைப் பிரம சொரூப மாகத் தியானிக்க சொரூப ஞானம் விளங்கும். இப் படி குருவை தியானிக்க சொரூபானந்தம் சித்திக்கும்.

**"ஆதார மாகிய ஆறெழுத் தானந்தன்**
**பாதார விந்தமே பற்றுகு மற்றெமக்கே**
**நாதாந்தத் தோங்கொளியைக் காட்டி இருளறலே**
**வேதாந்த சார விளக்கு."** என்பது. (?)

இந்நூல் குரு சம்பிரதாயக்கிரமத்திலே பக்குவாத் மாக்கள் அறிந்து சொரூபானந்தம் பெறக் கடவர். இதற்கு உதாரணம்:—ஞானவாசிட்டத்தில் தேவபூசை யத்தியாயத்தில்: தேகமுதற்பிரிவுகளால், அகமகமென் றனைத்துயிரும், சுத்தமாய்ச் சொரூபமாய், அறிவதா யறிவை மெய்யா, அந்தமற் றொன்றாய், மூகமாய்ச் சட மாய், மேனியிற்புறத்தில், ஒன்றிலே தோன்றி, பொய் யதாமுயற்கொம்பினை, உள்ளூறு சங்கற்பத்தினால்" என் னும் செய்யுட்களிற் கண்டுகொள்க.

*மேல் சுருதிசாரத்தில் "வெறும் பழுதையே, சொரூபமொன்றே, பாவாபாவாதீதப் பிரமம், தனித்த சுவாவத்ததீதம்" என்னும் முதற் குறிப்புடைய செய்யுள்களிற் கண்டுகொள்க.*

*பகவற்கீதை –இரண்டாவது சாங்கிய யோக அத்தியாயத்தில் "பொன்றுவ தூடம்புதனுள், அன்னவகையால்" எனவும், பதின்மூன்றுவது–க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ விபாக யோக அத்தியாயத்தில் "இப்படியுரிமையும், செறியுமிப்பொருளினை, உன்னிய வானமெங்கும், இரவிதா னொருவனையாய்" எனவும், பதினொட்டாவது–சந்நியாச அத்தியாயத்தில் "நன்றாய் ஞானத் திரளாகி, ஊனப்படுமிவ்வுடல்" எனவும் வரும் செய்யுட்களிற் கண்டுகொள்க.*

## மேல்தகர வித்தையில்—

**"பூதவா காசம்போற் சடமாகா தருட்சித்தாய்ப் பொலித லாலே, ஓதருமம் பரமான சபாபதியைச் சிதம்பரமென் றுரைத்த தந்தத், தீதகன்ற சிதம்பர மெந் நாளுமில கா நிற்கும் செயலால் என்றும், ஏத மிலாப் பதியதற்குச் சிதம்பரமென் றருநாமம் எய்திற் றுமால்"** *எனவும்,*

**"புரிகரணம் தனைக்கூர்ந்து நிற்றலாற் சொற்றகைய புவனத் தியார்க்கும், தெரிவரிதாய் உண்மையாய்ச் சித்தாயா னந்தமாய்த் திரியா தோங்கற், குரியபரி பூரணமாய் இருக்கின்ற பரப்பிரம முள்ளே காணும், பெரியாலத் தாலிந்த வுடல் பிரம புரமெனப்பேர் பெற்ற தம்மா"** *எனவும்,*

## மேல் விருத்தாசல புராணத்தில்

*"பூதாகாசம் மற்றுள நாளில், சடசித்தெங்கணும்" எனவும் வரும் செய்யுளிற் கண்டுகொள்க.*

*—பக்கம் 40 காண்க.*

## புவனே கலேஞான தீபம்

"மறுவாம லஞ்சென்னு மேலாங் துரியத்தின் வாழ் வறிந்து— நிறுவா மனத்தை நிறுவிச்சிற் பூரண நின் மலமாய்ப்— பெறுவானும் பேறுமற் றென்றும் சிவோ கப் பெரியவின்பம்— உறுவார் உறுகின்ற வேதாந்த மெங்கள் உலகம்மையே."

## வேதாந்தசார அநுபூதித்திரட்டு முற்றும்

குறிப்பு:— *புவனைகலைஞான தீபத்தில் மேற்குறித்த கலித்துறையின் முதல் இரண்டடிகளும் வேறுபாட மாக ஒரு பிரதியில் இருந்தது காண்க.*

ஸ்ரீ வெங்கடேஸ்வர் பிரஸ், கும்பகோணம்.